T. N. Olaganathan.

# தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்

70-2



அன்பளிப்பு:
தஞ்சாவூர்
நடராஜபிள்ளை உலகநாதன் M.A.B.T.

ஆசிரியர்
மயிலை - சீனி. வேங்கடசாமி




சாந்தி நூலகம்
2/122, பிராட்வே, சென்னை-1.

70-2

# மூன்றும் பதிப்பின் முன்னுரை

தமிழர் வளர்த்த அழகுக் கலைகள் என்னும் இந்நூல் மூன்றும் பதிப்பு இப்பொழுது வெளி வருகிறது. இதில் சிற்சில இடங்களில் முன் பதிப்பில் வராத சில புதிய செய்திகள் சேர்க் கப்பட்டுள்ளன. இந்நூலை அச்சிடும் சமயம் அச்சுப் பிழைநீக்கித் திருத்தம் செய்து கொடுத்த திரு ஊ. ஜெயராமன் அவர்களுக்கு என் நன்றி. இந்நூலின் மூன்றும் பதிப்பினை வெளியிட்ட சாந்தி நூலக உரிமையாளர் திரு. முத்துராமன் அவர்களுக்கு எனது நன்றி. இந்நூலினைக் கல்லூரியின் ஆராய்ச்சிப் பாடத் திற்குத் துணைநூலாக வைத்து ஆதரித்த பல்கலைக்கழகத் தமிழ்ப்பாடக் குழுவினருக்கு எனது நன்றி.

மைலாப்பூர்
15 ஏப்ரல் 1967

மயிலை. சீனி-வேங்கடசாமி

# இரண்டாம் பதிப்பின் முன்னுரை

"தமிழர் வளர்த்த அழகுக் கலைகள்" என்னும் இந்நூல் இப்போது இரண்டாம் பதிப்பாக வெளிவருகிறது. இப் பதிப்பில், முற்பதிப்பில் இல்லாத சிற்சில செய்திகள் புதிதாக ஆங்காங்கே சேர்க்கப் பட்டுள்ளன. திருத்தணிகை வீரட்டானேசுவரர் கோயில் படம் ஒன்றும் புதிதாகச் சேர்க்கப்பட்டுள்ளது. இந்நூலை ஆதரித்துப் போற்றியவர்களுக்கு எனது நன்றியுரித்து.

மயிலாப்பூர்,
சென்னை-4
20-3-'60

மயிலை. சீனி-வேங்கடசாமி

70-2

# முதற் பதிப்பின் முகவுரை

உலகத்திலே நாகரிகம் பெற்ற மக்கள் எல்லோரும் அழகுக் கலைகளை வளர்த்திருக்கிறார்கள். மிகப் பழைய காலந் தொட்டு நாகரிகம் பெற்று வாழ்ந்து வருகிற தமிழரும் தமக்கென்று அழகுக் கலைகளையுண்டாக்கிப் போற்றி வளர்த்து வருகிறார்கள். இரண்டாயிரத்து ஐந்நூறு ஆண்டுகளுக்கு முன்பிருந்தே தொடர்ந்து வருகிற தமிழரின் அழகுக் கலைகள் மிக மிகப் பழைமையானவை. மிகப் பழைய காலத்தில் நாகரிகம் பெற்று வாழ்ந்த மக்கள் சமூகத்தினர் இவ்வளவு நெடுங்காலம் தொடர்ந்து நிலைபெற்றிருக்கவில்லை. தமிழர் நாகரிகம் மிகப் பழைமையானது என்பதைச் சரித்திரம் அறிந்த அறிஞர்கள் எல்லோரும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள்.

ஆனால், தற்காலத்துத் தமிழச் சமூகம், தனது பழைய அழகுக் கலைச் செல்வங்களை மறந்துவிட்டது; "தன் பெருமை தான் அறியா" சமூகமாக இருந்து வருகிறது. "கலை கலை' என்று இப்போது கூறப்படுகிறதெல்லாம் சினிமாக் கலை, இசைக் கலைகளைப் பற்றியே. இலக்கியக் கலைகூட அதிகமாகப் பேசப்படுகிறதில்லை. ஏனைய அழகுக் கலைகளைப் பற்றி அறவே மறந்துவிட்டனர் இக்காலத்துத் தமிழர். மறக்கப்பட்ட அழகுக் கலைகள் மறைந்துகொண்டேயிருக்கின்றன.

தமிழச் சமூகத்தினாலே மறக்கப்பட்டு மறைந்துகொண்டிருக்கிற அழகுக் கலைகளைப் பற்றி இக்காலத்தவருக்கு அறிமுகப்படுத்துவதே இந்நூலின் நோக்கம். ஆனாலும், அழகுக் கலைகளைப் பற்றிப் பேசப் புகுந்தபோது, முறைமை பற்றி எல்லா அழகுக் கலைகளைப் பற்றியும் கூறப்படுகிறது.

அழகுக் கலைகளைப் பற்றி மேல்வாரியான செய்திகளே இந்நூலில் பேசப்படுகின்றன. அழகுக் கலைகளின் முற்ற முடிந்த செய்திகளைக் கூறுவது இந்நூலின் நோக்கம் அல்ல. அழகுக் கலைகளைப் பற்றிய மேல்வரம்பான, பொதுத்

தன்மையைக் கூறும் நூல் ஒன்று வேண்டியிருப்பதை யுணர்ந்தே இந்நூல் எழுதப்பட்டது.

அழகுக் கலைகளை நன்கறிந்த அறிஞரே அக் கலைகளைப் பற்றி எழுதத் தகுதி வாய்ந்தவர். ஆனால், அக் கலைகளை யெல்லாம் ஒருங்கே கற்றறிந்த அறிஞர் கிடைப்பது அரிதினும் அரிது. இந்நூலை எழுதியவர் இக் கலைகளையெல்லாம் முழுவதும் அறிந்தவர் அல்லர். "கல்வி கரையில, கற்பவர் நாள் சில, மெல்ல நினைக்கில் பிணிபல." அழகுக் கலைகள் ஒவ்வொன்றும் கடல் போன்று விரிந்து ஆழமானவை. அவற்றையெல்லாம் துறைபோக ஆழ்ந்து கற்பதற்கு ஆயுள் போதாது.

பண்டைக் காலத்தைப்போல மனித வாழ்க்கை அமைதியாக, நிதானமாக இக்காலத்தில் செல்லவில்லை. இந்த இருபதாம் நூற்றாண்டிலே மனிதரின் வாழ்க்கை மோட்டார்கார் சக்கரம் போல வெகு வேகமாகச் சுழன்றுகொண்டிருக்கிறது. வேகமாகச் சுழன்றுகொண்டிருக்கிற மனித வாழ்க்கையிலே, கவலையற்ற நிம்மதியான வாழ்க்கை வாய்க்கப் பெற்றவரும் கூட, அழகுக் கலைகளை ஆழமாகவும் நுட்பமாகவும் அறிய முடிகிறதில்லை.

அழகுக் கலைகளைப் பற்றி முழுவதும் தெரிந்துகொள்ளா விட்டாலும், அவற்றைப் பற்றிய மேல்வாரியான பொதுச் செய்திகளையாவது அறிந்திருக்க வேண்டுவது நாகரிகம் படைத்த மக்களின் கடமையாகும். அழகுக் கலைகளை உண்டாக்கி, உயரிய நிலையில் வளர்த்துப் போற்றிப் பாதுகாத்து வந்த தமிழச் சமூகத்தின் பரம்பரையினர், இக்காலத்தில் அவை மறைந்துபோகும் அளவுக்கு அவற்றை மறந்து வாழ்வது நாகரிகச் செயலாகாது. தமது மூதாதையர் வளர்த்துப் போற்றிய கலைகளைச் சிறிதளவாவது அறிந்து போற்றிப் பாதுகாக்க வேண்டுவது அவர் வழி வந்த பரம்பரையினரின் நீங்காக் கடமையும் உரிமையும் ஆகும்.

இக்காலத்தில் அழகுக் கலைகளைப் பற்றிய நூல்கள் சில வெளிவந்துள்ளன. ஆனால், அவை தமிழரின் அழகுக் கலைகள்

அனைத்தையும் கூறவில்லை. அழகுக் கலைகள் அனைத்தையும் ஒருங்கே அறிமுகப்படுத்தும் நூல் ஒன்று தேவைப்படுவதை அறிந்து, இந்நூல் எழுதப்பட்டது. இந்நூலில் குற்றங் குறைகள் இருக்கலாம். குற்றம் புரிவது மனித இயற்கை; குற்றம் நீக்கிக் குணத்தைக் கொள்வது அறிவுடையோர் கடமை.

இந்நூலில் சிற்சில இடங்களில் சில செய்திகள் மீண்டும் மீண்டும் கூறப்படுகின்றன. இதனைக் "கூறியது கூறல்" என்னும் குற்றமாகக் கொள்ளக்கூடாது. தெளிவுபட விளக்குவதற்காக இவ்வாறு கூறவேண்டுவது அவசியமாயிற்று.

இந்நூலுக்குப் புறம்பான ஒரு செய்தியைக் கூற வாசகர் விடை தர வேண்டுகிறேன். சில செய்திகள் புதிதாக ஆராய்ந்து இந்நூலுள் கூறப்படுகின்றன. முக்கியமாகக் கோயில் கட்டட வகைகளைப் பற்றிய செய்திகளைக் குறிப்பிட விரும்புகிறேன். இது மறக்கப்பட்டு மறைந்துபோன செய்தியாகும். இதனை ஆராய்ந்து முதன் முதலாக இங்குக் கூறியுள்ளேன். இச் செய்தியைப் பிற ஆசிரியர் எடுத்த எழுதலாம். ஆனால், இந்நூலிருந்து எடுக்கப்பட்டது என்பதைத் தயவு செய்து குறிப்பிட வேண்டும். இதை ஏன் இங்குக் குறிப்பிடுகிறேன் என்றால், எனது "பௌத்தமும் தமிழும்" என்னும் நூலிலிருந்து சில விஷயங்களை எடுத்து எழுதிக்கொண்ட ஒருவர், அந்நூலைக் குறிப்பிடாமல், தானே அவ் விஷயங்களை ஆராய்ந்து கண்டுபிடித்ததுபோல எழுதிக்கொண்டார். இவர் பொறுப்பு வாய்ந்த அரசாங்க உயர்தர உத்தியோகஸ்தர்! இவரைப்போல மற்றவர்களும் செய்யக்கூடாது என்பதற்காகவே இங்கு இதனைக் குறிப்பிடவேண்டியதாயிற்று. நூலாசிரியர் எல்லோரும் இப்படிக் களவாடுவதில்லை; ஒருசிலர் செய்கிறார்கள், என்ன செய்வது!

இந்நூலை அழகுபெறப் படங்களுடன் அச்சிட்டு வெளியிட்ட பாரி நிலையத்தாருக்கு எனது நன்றி உரியது.

மயிலாப்பூர்<br>சென்னை 4<br>20-8-'60

மயிலை. சீனி-வேங்கடசாமி

# உள்ளுறை





மகாபலிபுரம் : 'பஞ்ச பாண்டவ ரதம்' என்று வழங்கப்படுகிற பழைய கோயில் கட்டட அமைப்புகள்

T.N. Jagannathan

# உள்ளுறை

T.N. Jagannathan.





மகாபலிபுரம் : 'பஞ்ச பாண்டவ ரதம்' என்று வழங்கப்படுகிற பழைய கோயில் கட்டட அமைப்புகள்





திருமால் : அறிதுயில் அமர்ந்தோன்





பஞ்சலோகம் : அம்மையப்பர் திருமேனிகள்





நாமக்கல் : அரியரர்





சோழர் காலத்துச் சுவரோவியம் :
கருவூர்த் தேவரும் சோழ அரசனும்




கல் சிற்பம் : ஒரு சிற்றரசன்




கல் சிற்பம் : ஒரு இளவரசி

உ

தி. நா. உலகநாதன்.

தமிழர் வளர்த்த

# அழகுக் கலைகள்

## அழகுக் கலைகள் எவை ?

மனிதன் மிகப் பழைய காலத்திலே காட்டு மிராண்டியாக வாழ்ந்தான். இருக்க வீடும், உடுக்க உடையும், உண்ண உணவும் உண்டாக்கிக்கொள்ளத் தெரியாமல் அக்காலத்திலே மனிதன், விலங்குபோல அலைந்து திரிந்தான். பிறகு அவன் மெல்லமெல்ல சிறிது சிறிதாக நாகரிகம் அடைந்தான். வசிக்க வீடும், உடுக்க உடையும், உண்ண உணவும் உண்டாக்கிக்கொள்ளத் தெரிந்துகொண்டான்: இதனால் அவன் மிருக வாழ்க்கை யிலிருந்து விலகி நாகரிக வாழ்க்கை பெற்றான். ஆனால், மனிதன் நாகரிக வாழ்க்கையடைவதற்குப் பல்லாயிரம் ஆண்டுகள் கழிந்தன. மனிதன் நாகரிகம் பெறுவதற்குப் பேருதவியாக இருந்தவை அவன் சிறிது சிறிதாகக் கற்றுக்கொண்ட பலவகையான தொழில்களேயாகும். ஒவ்வொரு தொழிலையும் கற்றுத் தேர்வதற்கு அவனுக்குப் பல நூற்றாண்டுகள் கழிந்தன.[1]

---

[1] மனிதன், மிருக வாழ்க்கையிலிருந்து நாகரிக வாழ்க்கையடைந்த வரலாற்றைக் கூறும் நூலுக்கு ஆந்த்ரபாலஜி (Anthropology) என்பது பெயர்.

மனிதனுடைய நல்வாழ்விற்கு உதவுகிற எல்லாத் தொழில்களையும் கலைகள் என்று கூறலாம். தச்சுவேலை, கருமாரவேலை, உழவு, வாணிபம், நெசவு, மருத்துவம் முதலிய தொழில்கள் யாவும் கலைகளே. பண்டைக் காலத்திலே நமது நாட்டிலே அறுபத்துநான்கு கலைகள் இருந்தன என்று மணிமேகலை முதலிய நூல்கள் கூறுகின்றன. அக்காலத்தில் அறுபத்துநான்கு கலைகள் இருந்தன என்றால், பல துறையிலும் நாகரிகம் பெருகியுள்ள இந்தக் காலத்திலே கலைகளின் எண்ணிக்கை மிகமிகப் பெருகியிருக்கிறது என்பதில் ஐயம் இல்லை.

நாம் இங்கு ஆராயப் புகுவது இந்தப் பொதுக் கலைகளைப் பற்றி அன்று. இப்பொதுக் கலைகளுக்கு வேறுபட்ட அழகுக் கலைகளைப் பற்றித்தான் ஆராய்ச்சி செய்யப்போகிறோம்.

பலவகையான தொழில்களில் வளர்ச்சியும் தேர்ச்சியும் அடைந்து, தனது வாழ்க்கைக்கு வேண்டிய உணவு, உடை, உறையுள், கல்வி, செல்வம் முதலியவையு பெற்று நாகரிகமாக வாழ்கிற மனிதன், இவற்றினால் மட்டும் மனவமைதி அடைகிறதில்லை. நாகரிகமாக வாழும் மக்கள் உண்டு, உடுத்து, உறங்குவதனோடுமட்டும திருப்தியடைவதில்லை. அவர்கள் மனம் வேறு இன்பத்தை அடைய விரும்புகிறது. அந்த இன்பத்தைத் தருவது எது? அழகுக் கலைகளே. நாகரிக மக்கள் நிறைமனம் — திருப்தி — அடைவதற்குத் துணையாயிருப்பவை அழகுக் கலைகள்தாம். அழகுக் கலைகள் மனிதனுடைய மனத்திற்கு அழகையும் இன்பத்தையும் அளிக்கின்றன. அழகுக் கலைகளின் வாயிலாக மனிதன் நிறைமனம் (திருப்தி) அடைகிறான்.

அழகுக் கலைக்கு இன்கலை என்றும், கவின்கலை என்றும், நற்கலை என்றும் வேறு பெயர்கள் உண்டு.

மனிதனுடைய மனத்தில் உணர்ச்சியை எழுப்பி அழகையும் இன்பத்தையும் அளிக்கிற பண்பு அழகுக் கலைகளுக்கு உண்டு. மனிதன் தன்னுடைய அறிவினாலும் மனோபாவத்தினாலும் கற்பனையினாலும் அழகுக் கலைகளை அமைத்து, அவற்றின் மூலமாக உணர்ச்சியையும் அழகையும் இன்பத்தையும் காண்கிறான். அழகுக் கலைகள், மனத்திலே உணர்ச்சியை எழுப்பி அழகுக் காட்சியையும் இன்ப உணர்ச்சியையும் கொடுத்து மகிழ்விக்கிற படியினாலே, நாகரிகம் படைத்த மக்கள் அழகுக் கலைகளைப் போற்றுகிறார்கள்; போற்றி வளர்க்கிறார்கள்; துய்த்து இன்புற்று மகிழ்கிறார்கள்.

அழகுக் கலையை விரும்பாத மனிதனை அறிவு நிரம்பாத விலங்கு என்றே கூறவேண்டும்; அவனை முழு நாகரிகம் பெற்றவன் என்று கூறமுடியாது.

அழகுக் கலைகள் எத்தனை? அழகுக் கலைகள் ஐந்து. அவை கட்டடக் கலை, சிற்பக் கலை, ஓவியக் கலை, இசைக் கலை, காவியக் கலை என்பன. பண்டைக் காலத்தில் நமது நாட்டவர் கட்டடக் கலையையும் சிற்பக் கலையையும்[1] ஒரே பெயரால் சிற்பக் கலை என்று வழங்கினார்கள். ஆனால், கட்டடக் கலை வேறு; சிற்பக் கலை வேறு.

காவியக் கலையுடன் நாடகக் கலையும் அடங்கும். அழகுக் கலைகளில் காவியக் கலை இசைக் கலை இரண்டையும் பண்டைத் தமிழர் இயல், இசை, நாடகம் என்று மூன்றாகப் பிரித்தனர். அவர்கள் இயற்றமிழ் என்று கூறியது காவியக் கலையை. செய்யுள் நடையிலும் வசன நடையிலும் காவியம் அமைப்பது இயற்றமிழ் எனப்பட்டது. செய்யுளை இசையோடு பாடுவது இசைத்தமிழ் எனப்பட்டது. இயலும் இசையும் கலந்து ஏதேனும் கருத்தையோ கதையையோ தழுவி வருவது நாடகத்

[1] Architecture and Sculpture

தமிழ் எனப்பட்டது. நாடகத்தமிழில் நடனம் நாட்டியம் கூத்து என்பனவும் அடங்கும். எனவே, அழகுக் கலைகள் ஐந்தையும் விரித்துக் கூறுமிடத்து, கட்டடக் கலை, சிற்பக் கலை, ஓவியக் கலை, இசைக் கலை, கூத்துக் கலை (நடனம், நாட்டியம்), காவியக் கலை, நாடகக் கலை என ஏழாகக் கூறப்படும்.

அழகுக் கலைகளைக் கண்ணினால் கண்டும், காதினால் கேட்டும், உள்ளத்தினால் உணர்ந்தும் மகிழ்கிறோம். இனி, இவற்றை விளக்குவோம்.

கண்ணால் கண்டு இன்புறத்தக்கது கட்டடக் கலை. பருப்பொருளாக உள்ளபடியால், கட்டடத்தைத் தூரத்தில் இருந்தும் கண்டு களிக்கிறோம்.

இரண்டாவதாகிய சிற்பக் கலை மனிதர், விலங்கு, பறவை, தாவரம் முதலான உலகத்திலுள்ள இயற்கைப் பொருள்களின் வடிவத்தையும், கற்பனையாகக் கற்பித்து அமைக்கப்பட்ட பொருள்களின் உருவத்தையும் அழகு பட அமைப்பது. இந்தச் சிற்பக் கலை, கட்டடக் கலையை விட நுட்பமானது. இதனையும் கண்ணால் கண்டு மகிழ் கிறோம்.

மூன்றாவதாகிய ஓவியக் கலை, சிற்பக் கலையைவிட நுட்பமானது. உலகத்தில் காணப்படுகிற எல்லாப் பொருள்களின் உருவத்தையும், உலகில் காணப்படாத கற்பனைப் பொருள்களின் வடிவத்தையும் பலவித நிறங் களினாலே அழகுபட எழுதப்படுகிற படங்களே ஓவியக் கலையாம். முற்காலத்தில் சுவர்களிலும் துணிகளிலும் ஓவியங்கள் எழுதப்பட்டன. படம் என்னும் சொல் படாம் (துணி) என்னும் சொல்லிலிருந்து உண்டாயிற்று. இதனையும் அருகில் இருந்து கண்ணால் கண்டு மகிழ்கிறோம்.

நான்காவதாகிய இசைக் கலையைக் கண்ணால் காண முடியாது. அது காதினால் கேட்டு இன்புறத்தக்கது.

ஐந்தாவதாகிய காவியக் கலை மேற்கூறிய கலைகள் எல்லாவற்றிலும் மிக நுட்பமுடையது. ஏனென்றால், இக் காவியக் கலையைக் கண்ணால் கண்டு இன்புற முடியாது. காதினால் கேட்கக்கூடுமாயினும், கேட்பதனாலே மட்டும் மகிழ முடியாது. காவியக் கலையைத் துய்ப்பதற்கு மனவுணர்வு மிக முக்கியமானது. மனத்தினால் உணர்ந்து அறிவினால் இன்புறவேண்டும். ஆகையினாலே, காவியக் கலை கலைகளில் சிறந்த நுண்கலை என்றும் மென்கலை என்றும் கூறப்படுகிறது.

இசைக் கலையோடு தொடர்புடைய நடனம் நாட்டியம் கூத்து என்பனவும், காவியக் கலையுடன் தொடர்புடைய நாடகமும் கண்ணால் கண்டும் காதால் கேட்டும் மகிழத்தக்கன.

நாகரிகம் பெற்ற மக்கள் உலகத்திலே எங்கெங் கெல்லாம் வாழ்கிறார்களோ அங்கங்கெல்லாம் அவர்கள் அழகுக் கலைகளை வளர்த்திருக்கிறார்கள். அழகுக் கலைகள் மனித நாகரிகத்தின் பண்பாடாக விளங்குகின்றன. நாகரிகம் பெற்ற எல்லா நாட்டிலும் அழகுக் கலைகள் வளர்ச்சி யடைந்திருந்தாலும், இந்த நுண்கலைகள் எல்லாம் எங்கும் ஒரே விதமாக வளரவில்லை. அழகுக் கலைகளின் அடிப்படையான தன்மை எல்லா நாட்டிலும் ஒரேவிதமாக இருந்தபோதிலும், அதாவது, கற்பனையை யும் அழகையும் இன்பத்தையும் தருவதே அழகுக் கலைகளின் நோக்கமாக இருந்தபோதிலும், அவை வெவ் வேறு நாட்டில் வெவ்வேறு விதமாக உருவடைந்து வளர்ந்திருக்கின்றன.

அந்தந்த நாட்டின் இயற்கையமைப்பு, தட்ப வெப்ப நிலை, சுற்றுச்சார்பு, மக்களின் பழக்கவழக்கங் கள், மனோபாவம், சமயக் கொள்கை முதலியவற்றிற்கு ஏற்றபடி அழகுக் கலைகள் வெவ்வேறு விதமாக உரு

வடைந்திருக்கின்றன. இக் காரணங்களினால்தான் அழகுக் கலைகள் எல்லாம் எல்லா நாட்டிலும் ஒரேவிதமாக இல்லாமல் வெவ்வேறு நாட்டில் வெவ்வேறு விதமாக உள்ளன. இக்காரணங்களினால்தான் நமது நாட்டு அழகுக் கலைகளும், கிரேக்க நாட்டு அழகுக் கலைகளும், சீன நாட்டு அழகுக் கலைகளும், ஜப்பான் நாட்டு அழகுக் கலைகளும், உரோம நாட்டு அழகுக் கலைகளும், இலங்கை நாட்டு அழகுக் கலைகளும், ஏனைய நாட்டு அழகுக் கலைகளும் வெவ்வேறு விதமாக வளர்ச்சியடைந்துள்ளன.

ஈண்டு, நமது தமிழ் நாட்டின் அழகுக் கலைகளைப் பற்றித் தனித்தனியே ஆராய்வோம். நமது முன்னோர் அழகுக் கலைகளை எவ்வாறு போற்றி வளர்த்தார்கள் என்பதைக் காண்போம். இவற்றை ஆராய்வதற்கு முன்னர், முத்தமிழ்ப் பேராசிரியர் அருள்திரு. விபுலானந்த அடிகளார், தமது யாழ் நூலிலே அழகுக் கலைகளின் பொதுவான சில இலக்கணங்களைக் கூறியுள்ளதை எடுத்துக்காட்டுவது சிறப்புடையதாக இருக்கும். அவை பின்வருமாறு :

இயற்றமிழ்

"அகரமுதல் னகரவிறுவாயாகிய முப்பதும், சார்ந்து வரன் மரபினவாகிய மூன்றும் என்னும் முப்பத்துமூன்று எழுத்துக்களைத் தொழிற்படுத்துதலினாலே, இயற்றமிழானது பொருள் பொதிந்த சொற்களை ஆக்கி, அவை கருவியாகப் பாரகாவியங்களையும் நீதிநூல்களையும் வகுத்து, இம்மை மறுமைப் பயனளிக்கின்றது."

இசைத்தமிழ்

"ச ரி க ம ப த நி என்னும் ஏழு ஓசை கருவியாக இசைத் தமிழானது ஏழ்பெரும் பாலைகளை வகுத்து, அவை நிலைக்களமாக நூற்றுமூன்று பண்களைப் பிறப்

பித்து, அவைதமது விரிவாகப் பதினோராயிரத்துத் தொண்ணூற்றொன்று என்னுந் தொகையினவாகிய ஆதியிசைகளை யமைத்து, இம்மையின்பமும் தேவர்ப் பரவுதலா னெய்தும் மறுமையின்பமும் பெறுமாறு செய்கின்றது."

நாடகத் தமிழ்

"நகை, அழுகை, இளிவரல், மருட்கை, அச்சம், பெருமிதம், வெகுளி, உவகை என்னும் மெய்ப்பாடுகளை நிலைக்களமாகக் கொண்டு, உள்ளத்துணர்வினாலும், உடலுறுப்பினாலும், மொழித்திறனாலும், நடையுடையினாலும் அவைதம்மைத் தொழிற்படுத்தி, இருவகைக் கூத்து, பத்துவகை நாடகம் என்னுமிவற்றைத் தோற்றுவித்து, நாடகத் தமிழ் உள்ளத்திற்கு உவகை யளிக்கின்றது."

ஓவியம்

"நேர்கோடு, வட்டம், முக்கோணம் ஆகிய மூன்று மூலவடிவங்களினின்று தோன்றிய உருக்கள் எண்ணிறந்தன. எல்லா வகையான வர்ணங்களும் அமைந்த அழகிய படங்களை அச்சியற்றுவோர் பயன்படுத்தும் நிறங்கள் மஞ்சள், சிவப்பு, நீலம் என்னும் மூன்றுமேயாம்.

"இவ்வாறு ஆராயுமிடத்து, கண்ணினாலும், செவியினாலும், உள்ளத்தினாலும் உணர்ந்து இன்புறற்பாலவாய், அழகுக்கலை யுருக்களெல்லாம் ஒருசில மூலவுருக்கள் காரணமாகத் தோன்றி நின்றனவென்பது தெளிவாகின்றது.

"உருக்களை ஆக்கிக்கொள்ளும் முறையினைக் கூறும் நூல்கள் பொதுவியல்புகளை வகுத்துக் காட்டுவன. புலவன், இசையோன், கூத்தன், ஓவியன் என்று இன்னோர், தமது சொந்த ஆற்றலினாலே, நுண்ணிய

விகற்பங்களைத் தோற்றுவித்துச் செம்மை நலஞ் சான்ற உருக்களைப் பெருக்குதலினாலே அழகுக் கலைகள் விருத்தி யடைகின்றன.

"இவ்வாறு நோக்குமிடத்து, புத்தம்புதிய உருவங்களைப் படைத்துத்தருதலே கவிஞர் முதலிய அழகுக் கலையோர் இயற்றுதற்குரிய அருந்தொழில் என்பது புலனாகின்றது. மரபு பட்டு வந்த உருவங்களிற் பயின்றோர் நுண்ணுணர்வுடையராயின், புதிய உருவங்களை எளிதின் அமைப்பர். முன்னிருந்து இறந்துபட்ட உருவங்களை ஆராய்ந்து கண்டறிதற்கும் அத்தகைய பயிற்சியும் நுண்ணுணர்வும் வேண்டப்படுபவேயாம்."[1]

இவ்வாறு அடிகளார், அழகுக் கலைகளின் பொது இலக்கணத்தை விளக்கிக் கூறினார். நிற்க.

இனி, தமிழ் நாட்டிலே நமது முன்னோரால் வளர்க்கப்பட்ட பழைய அழகுக் கலைகளைப் பற்றித் தனித் தனியே ஆராய்வோம்.

---

[1] யாழ்நூல், பக்கம் 361, 362.

# கட்டடக் கலை

அழகுக் கலைகளில் முதலாவதாகிய கட்டடக் கலையை ஆராய்வோம். வீடுகள் மாளிகைகள் அரண்மனை கள் முதலியவை கட்டடங்களே. ஆனால், நாம் இங்கு ஆராயப்புகுவது கோயில் கட்டடங்களை மட்டுமே. முதலில் கோயில் கட்டடங்கள் நமது நாட்டில் எந் தெந்தப் பொருள்களால் அமைக்கப்பட்டன என்பதை ஆராய்வோம்.

மிகப் பழைய காலத்திலே நமது நாட்டுக் கோயில் கட்டடங்கள் மரத்தினால் அமைக்கப்பட்டன. அதன் பிறகு செங்கல், சுண்ணாம்பு, மரம் முதலிய பொருள் களால் கட்டடங்கள் அமைக்கப்பட்டன. அதற்குப் பின்னர் பெரிய பாறைகளைக் குடைந்து குகைக் கோயில்கள்[1] அமைக்கப்பட்டன. கடைசியாகத் தனித் தனிக் கருங்கற்களைக் கொண்டு கற்றளிகள் அமைக்கப் பட்டன. கருங்கற்களை ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கிக் கட்டப்படுவது கற்றளி எனப்படும். வெறும் மண்ணால் கட்டப்பட்ட கோயில்களுக்கு மண்டளி என்பது பெயர்.

மரக்கட்டடங்கள்

பழங்காலத்திலே கோயில்கள் மரத்தினால் கட்டப் பட்டன என்று கூறினோம். மரத்தைத் தகுந்தபடி செதுக்கிக் கட்டடம் அமைப்பது எளிது. பண்டைத் தமிழகமான இப்போதைய மலையாள நாட்டின் சில இடங்களில், இன்றும் கோயில்கள் மரத்தினால் கட்டப் பட்டிருப்பதைக் காணலாம். சிதம்பரத்தின் சபாநாதர்

---

[1] Rockcut cave temples

மண்டபம் இப்போதும் மரத்தினுலேயே அமைக்கப் பெற்றிருக்கிறது. சிதம்பரத்தில் ஊர்த்துவ தாண்டவ மூர்த்தி ஆலயம், முற்காலத்தில் மரத்திஞல் அமைக்கப் பட்டிருந்தது; பிற்காலத்தில் கருங்கல்லினுல் கட்டப் பட்டது. கல்லினுல் கட்டப்பட்டாலும், அதன் தூண்கள், கூரை (விமானம்) முதலிய அமைப்புகள் மரத்திஞல் அமைக்கப்பட்டதுபோலவே காணப்படுகின்றன. சிதம் பரக் கோயிலின் பழைய கட்டடங்கள் எல்லாம் மரத் திஞலே அமைக்கப்பட்டிருந்தன என்பதில் சிறிதும் ஐயமில்லை. திருக்குற்ருலத்துச் சித்திரசபைக் கோயில் ஆதியில் மரத்திஞல் கட்டப்பட்டிருந்தது. முற்காலத்தில் மரத்திஞலே கோயில் கட்டடங்கள் கட்டப்பட்டன என்பதற்குச் சான்று, பிற்காலத்தில் கல்லினுல் அமைக் கப்பட்ட கோயில் கட்டடங்களிலே, மரத்தைச் செதுக்கி யமைக்கப்பட்டதுபோன்ற அமைப்புகள் காணப்படுவது தான்.

மரக் கட்டடங்கள் வெயிலினுலும் மழையினுலும் தாக்குண்டு விரைவில் பழுதுபட்டு அழிந்துவிடும் தன்மையன. முக்கியமாக மேல்பகுதியாகிய விமானம் விரைவில் பழுதடைந்தது. ஆகவே, அவை பழுது படாதபடி அவற்றின்மேல் செப்புத் தகடுகளை வேய்வது பண்டைக் காலத்து வழக்கம். செப்புத் தகடு வேய்ந்த கூரை விரைவில் பழுதடையாது. முற்காலத்தில், சிதம் பரம் முதலிய கோயில்களின் கூரைகளில், சில அரசர்கள் செப்புத் தகடுகளையும் பொற்றகடுகளையும் வேய்ந்தார் கள் என்று கூறப்படுகின்றனர். அக்காலத்தில் மரத் திஞல் கட்டடம் அமைக்கப்பட்டிருந்தபடியினுல், அவை விரைவில் பழுதாகாதபடி செப்புத் தகடுகளையும் பொற் றகடுகளையும் அரசர்கள் கூரையாக வேய்ந்தார்கள்.

செங்கற் கட்டடங்கள்

மரக் கட்டடம் விரைவில் பழுதடைவதோடு எளிதில் தீப்பிடித்துக்கொள்ளும். ஆகவே, பிற்காலத்தில் செங்கல், சுண்ணும்பு, மரம் முதலியவை கொண்டு கோயில்களைக் கட்டத் தொடங்கினார்கள். செங்கற் கோயில்கள், மரக் கோயில்களைவிட உறுதியானவும் நெடுநாள் நீடித்திருக்கக்கூடியனவுமாக இருந்தன. இவைகளும் சில நூற்றாண்டுகள்வரையில்தான் நீடித்திருந்தன. செங்கற் கட்டடங்கள், ஏறக்குறைய 200 அல்லது 300 ஆண்டுகளுக்குமேல் நிலைபெறுவதில்லை. கி.பி. 600-க்கு முற்பட்ட காலத்திலே இருந்த நமது நாட்டுக் கோயிற் கட்டடங்கள் எல்லாம் செங்கற் கட்டடங்களே.

சங்க காலத்திலே கட்டப்பட்ட கோயில்கள், செங்கற் கட்டடங்களையும் மர விட்டங்களையும் கொண்டு அமைக்கப்பட்டு, சுவர்மேல் சுண்ணம் பூசப் பட்டிருந்தன. இத்தகைய செங்கற் கட்டடக் கோயில்களை அவ்வப்போது செப்பனிடாமற்போனால், அவை சிதைந்து அழிந்துவிடும். கடியலூர் உருத்திரங்கண்ணனார் என்னும் சங்கப் புலவர், இடிந்து சிதைந்துபோன செங்கற் கட்டடக் கோயில் ஒன்றைக் கூறுகிறார்:

"இட்டிகை நெடுஞ்சுவர் விட்டம் வீழ்ந்தென
மணிப்புறாத் துறந்த மரஞ்சோர் மாடத்து
எழுதணி கடவுள் போகலிற் புல்லென்று
ஒழுகுபலி மறந்த மெழுகாப் புன்றிணை"*

என்பது அச்செய்யுட் பகுதி.

கடைச்சங்க காலத்தின் இறுதியில் இருந்த சோழன் செங்கணான், சிவபெருமானுக்கும் திருமாலுக்கும் ஆக

---

[1] அகநானூறு 167, கடியலூர் உருத்திரங்கண்ணனார்.

எழுபதுக்கு மேற்பட்ட கோயில்களைக் கட்டினான். இதனை,

"இருக்கிலங்கு திருமொழிவாய் எண்டோ ளீசற்கு
எழில்மாடம் எழுபதுசெய் துலக மாண்ட
திருக்குலத்து வளச் சோழன்"

என்று செங்கட் சோழனைப் பற்றித் திருமங்கையாழ்வார் கூறுவதிலிருந்து அறியலாம். மேலும்,

"பெருக்காறு சடைக்கணிந்த பெம்மான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோ டெட்டும்"[1]

என்று திருநாவுக்கரசர் கூறுவதும் சோழன் செங்கணான் அமைத்த பெருங்கோயில்களையே யாகும். சோழன் செங்கணான் அமைத்த பெருங்கோயில்கள் எழுபத்தெட்டும் செங்கற் கட்டடங்களே. ஏனென்றால், கற்றளிகள்—அதாவது, கருங்கற் கட்டடங்கள்—கட்டும் முறை அக்காலத்தில் ஏற்படவில்லை. செங்கற் கட்டடங்களாகையினாலே, அவை இரண்டு மூன்று நூற்றாண்டுகளுக்குமேல் நிலைபெற்றிருக்க இடமில்லை.

பாறைக்கோயில்கள்

கி.பி. 7ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில், தொண்டை நாட்டையும் சோழ நாட்டையும் மகேந்திர வர்மன் என்னும் பல்லவ அரசன் அரசாண்டான். இவன் ஏறக்குறைய கி.பி. 600 முதல் 630 வரையில் ஆட்சி செய்தான். இவன் காலத்தில் திருநாவுக்கரசு சுவாமிகள் இருந்தார். இவ்வரசன் கோயிற் கட்டட அமைப்பில் புதிய முறையை ஏற்படுத்தினான். பெரிய கற்பாறைகளைக் குடைந்து அழகான 'குகைக் கோயில்களை' (பாறைக் கோயில்களை) அமைத்தான். பாறையைச் செதுக்கித் தூண்களையும் முன்மண்டபத்தையும் அதற்குள் திருவுண்ணாழிகையையும்

---

[1] திரு அடைவு_திருத்தாண்டகம், 5.

(கருப்பக் கிருகத்தையும்) அமைக்கும் புத்தம் புதிய முறையை இவன் உண்டாக்கினான்.

மகேந்திரவர்மன் கற்பாறைகளைக் குடைந்து அமைத்த குகைக்கோயில்களில் ஒன்று மண்டகப்பட்டு என்னும் ஊரில் இருக்கிறது. இவ்வூர், தென் ஆர்க்காடு மாவட்டத்தில், விழுப்புரம் தாலுகாவில் உள்ள விழுப்புரம் இரயில் நிலையத்திலிருந்து, வடமேற்கே 13 மைல் தூரத்தில் இருக்கிறது. இவ்வூருக்கு மேற்கில் ½ மைல் தூரத்தில் சிறு பாறைக்குன்றின் வடக்குப் பக்கத்தில் இந்தக் குகைக்கோயில் அமைந்திருக்கிறது. இக்குகைக் கோயிலில் இருக்கிற வடமொழிச் சாசனம் ஒன்று இவ்வாறு கூறுகிறது:

> "செங்கல், சுண்ணம், மரம், உலோகம் முதலியவை இல்லாமலே பிரம, ஈசுவர, விஷ்ணுக்களுக்கு விசித்திர சித்தன் என்னும் அரசனால் இக்கோயில் அமைக்கப்பட்டது."

இந்தச் சாசனத்தின் கருத்து என்னவென்றால், செங்கல், சுண்ணம்பு, மரம், உலோகம் முதலியவற்றைக் கொண்டு கோயிற் கட்டடங்களை அமைக்கும் பழைய முறையை மாற்றி, அப் பொருள்கள் இல்லாமலே மும்மூர்த்திகளுக்குப் பாறையில் கோயிலை அமைத்தான் விசித்திர சித்தன்[1] என்னும் அரசன் என்பது.

மகேந்திரவர்மன் காலத்துக்கு முன்னே, நமது நாட்டுக் கோயிற் கட்டடங்கள் செங்கல், சுண்ணம், மரம், உலோகம் முதலிய பொருள்களைக் கொண்டு உண்டாக்கப்பட்டன என்பதும், இவ்வரசன் காலத்தில் தான் பாறைகளைச் செதுக்கி உண்டாக்கப்படும் குகைக் கோயில்கள் புதியவாகச் சமைக்கப்பட்டன என்பதும் இதனால் தெரிகின்றன.

---

[1] விசித்திர சித்தன் என்பது மகேந்திரவர்மனுடைய சிறப்புப் பெயராகும்.

குகைக் கோயிலை அமைக்கும் புதிய முறையை ஏற்படுத்திக் கட்டடக் கலையில் ஒரு புரட்சியை உண்டாக்கிய மகேந்திரவர்மன், வேறு பல குகைக் கோயில்களையும் அமைத்திருக்கிறான். சென்னைக்கு அடுத்த பல்லாவரத்திலும், காஞ்சிபுரத்துக்கு அடுத்த பல்லாவரத்திலும், திருச்சிராப்பள்ளி மலையிலும், மண்டகப்பட்டு, மகேந்திரவாடி, சீயமங்கலம், மேலைச்சேரி, வல்லம், மாமண்டூர், தளவானூர், சித்தன்ன வாசல் முதலிய ஊர்களிலும் இவ்வரசன் அமைத்த குகைக் கோயில்கள் உள்ளன.[1]

மகேந்திரவர்மனுக்குப் பிறகு, அவன் மகன் மாமல்லனான நரசிம்மவர்மனும், அவனுக்குப் பின்னர் பரமேசுவரவர்மன் முதலியவர்களும் மாமல்லபுரம் (மகாபலிபுரம்), சாளுவன் குப்பம் முதலிய இடங்களில் குகைக் கோயில்களையும் 'இரதக்' கோயில்களையும் பாறைகளில் அமைத்தார்கள்.[2]

கருங்கற் பாறைகளைக் குடைந்து அமைக்கப்பட்ட இக்குகைக்கோயில்களில், மரத்தில் செய்யப்பட்ட மர வேலைபோன்ற சில அமைப்புகள் காணப்படுகின்றன. இந்த அமைப்புகள், முன்பு கூறியபடி, பண்டைக் காலத்தில் மரங்களினால் கோயில்கள் கட்டப்பட்டன என்பதைக் காட்டுகின்றன.

**கற்றளிகள்**

கி.பி. 7ஆம் நூற்றாண்டின் இறுதியில் அரசாண்ட இரண்டாம் நரசிம்மவர்மன் ஆன இராஜசிம்மன் காலத்தில் கற்றளிகள் அமைக்கும் முறை ஏற்பட்டது. கற்றளி

---

[1] மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் எழுதியுள்ள "மகேந்திரவர்மன்" என்னும் நூல் காண்க.

[2] மயிலை சீனி. வேங்கடசாமி அவர்கள் எழுதியுள்ள "நரசிம்மவர்மன்" என்னும் நூலைக் காண்க.

என்றால் கற்கோயில் என்பது பொருள். கருங்கற்களை ஒன்றின்மேல் ஒன்றாக அடுக்கிக் கட்டப்படும் கோயில் கட்டடங்களுக்குக் கற்றளி என்பது பெயர். சுண்ணம் சேர்க்காமலே இக்கட்டடங்கள் அமைக்கப்பட்டன.

மகாபலிபுரத்தில் கடற்கரையோரமாக உள்ள கற்றளியும், காஞ்சிபுரத்தில் கயிலாசநாதர் கோயில் என்று இப்போது பெயர் வழங்கப்படும் இராஜசிம்மேச்சரம் என்னும் கற்றளியும், பனைமலை என்னும் ஊரிலுள்ள கற்கோயிலும் முதன் முதல் அமைக்கப்பட்ட கற்றளிகளாகும். இக் கற்றளிகள் உண்டாக்கப்பட்டு ஏறக்குறைய 1,200 ஆண்டுகளாகியும், அவை இப்போதும் உள்ளன. இராஜசிம்ம பல்லவன் காலத்துக்குப் பிறகு கற்றளிகள் பல தோன்றின.

செங்கற் கோயில்களைவிடக் கற்றளிகள் பல காலம் நிலைநிற்பவை. கி.பி. 8ஆம் நூற்றாண்டின் தொடக்கத்திலிருந்து பல அரசர்கள் கட்டிய கோயில்களில் பெரும்பாலானவும் கற்றளிகளே. கி.பி. 10ஆம் நூற்றாண்டில் சோழர்கள் பல்லவ அரசரை வென்று சிறப்படைந்தார்கள். இச்சோழர்களுக்குப் பிற்காலச் சோழர் என்பது பெயர். இச்சோழர்கள் புதியவாகப் பல கோயில்களைக் கற்றளியாகக் கட்டினார்கள். மேலும், பழைய செங்கற் கட்டடக் கோயில்களை இடித்துவிட்டு அக்கோயில்களைக் கற்றளியாகக் கட்டினார்கள். இச்செய்திகளை நாம் சாசனங்களிலிருந்து தெரிந்துகொள்கிறோம்.

இதுவரையில் கோயிற் கட்டடங்களை எந்தெந்தப் பொருள்களால் அமைத்தார்கள் என்பதைக் கண்டோம். இனி, நமது நாட்டுக் கோயில் அமைப்புகளையும் அவற்றின் விதங்களையும் பற்றி ஆராய்வோம்.

மூன்று வகைப் பிரிவுகள்

பாரத (இந்திய) நாட்டுக் கட்டடங்களைச் சிற்பக் கலைஞர், மூன்று பெரும் பிரிவுகளாகப் பிரித்திருக்கிறார்கள். அவை நாகரம், வேசரம், திராவிடம் என்பன.

இவற்றில் நாகரம் என்பது வட இந்தியக் கட்டடம். இது நருமதை ஆற்றுக்கு வடக்கே வட இந்தியாவில் அமைக்கப்பட்டவை. அடிமுதல் முடிவரையில் நான்கு பட்டையாக (சதுரமாக) அமைக்கப்படுவது இது. இது தமிழ் நாட்டில் இடம்பெறவில்லை. ஆகவே, இது நமது ஆராய்ச்சிக்கு உட்படவில்லை.

இரண்டாவதான வேசரம் என்னும் பெயருள்ள கட்டட வகை, பண்டைக் காலத்தில் பெரிதும் பௌத்த மதத்தாரால் வளர்ச்சியடைந்ததாகத் தோன்றுகிறது. இந்த வேசரக் கட்டடங்கள், தரை அமைப்பிலும், உடல் (கட்டட) அமைப்பிலும், விமான (கூரை) அமைப்பிலும் வட்டவடிவமாக அல்லது நீண்ட அரைவட்ட வடிவமாக இருக்கும். இந்தக் கட்டட அமைப்பு முறை, தமிழ் நாட்டுக் கோயிற் கட்டட அமைப்பு சிலவற்றில் இடம் பெற்றுள்ளது. இதைப் பற்றிப் பின்னர் அதற்குரிய இடத்தில் கூறுவோம்.

மூன்றாவது பிரிவான திராவிடம் என்னும் பிரிவு தென் இந்தியக் கோயிற் கட்டடங்களாகும். இவை வடக்கே கிருஷ்ணா நதிமுதல் தெற்கே கன்னியாகுமரி வரையில் காணப்படுகின்றன. திராவிடக் கோயிற் கட்டட வகையில் தமிழர், சளுக்கியர், ஹொய்சளர் முதலிய உட்பிரிவுகள் உள்ளன. இந்த உட்பிரிவுகளை விடுத்துத் தமிழ் நாட்டுக் கோயில்களைமட்டும் ஆராய்வோம். தமிழ் நாட்டுக் கோயில்களிலும் பல்லவர் காலத்துக் கோயில்கள், (பிற்காலச்) சோழர் காலத்துக் கோயில்கள், பாண்டியர் காலத்துக் கோயில்கள், விஜயநகர

அரசர் காலத்துக் கோயில்கள் என்று உட்பிரிவுகள் உள்ளன. அப்பிரிவுகளைத் தூண்கள், கூடுகள் முதலிய அமைப்புகளிலிருந்து கண்டுகொள்ளலாம். நாம் இங்கு ஆராயப் புகுவதெல்லாம் தமிழ் நாட்டுக் கோயில்களைப் பற்றிய பொதுவான அமைப்புப் பற்றிய மேற்போக்கான செய்திகளையேயாகும்.

### கோயில்களின் தரையமைப்பு

பொதுவாக எல்லா இந்துக் கோயிலும் கிழக்கு அல்லது மேற்கு நோக்கி இருக்கும். சில கோயில்கள் தெற்கு நோக்கியும் வடக்கு நோக்கியும் அபூர்வமாக இருப்பதுண்டு. பொதுவாகக் கிழக்கு அல்லது மேற்கு நோக்கியே கோயில்களை அமைப்பது வழக்கம்.

கோயிற் கட்டடத்தின் தரையமைப்பு, அகநாழிகையை (கருப்பக்கிருகத்தை)யும் அதன் முன்புறத்தில் சிறிய இடைகழியையும் உடையது. கருப்பக்கிருகத்தைச் சார்ந்த இடைகழிக்கு இடைநாழிகை (அர்த்த மண்டபம்) என்பது பெயர். அகநாழிகை (கருப்பக்கிருகம்) பெரும்பாலும் சதுரமான அமைப்புடையது. சில அகநாழிகைகள் நீண்ட சதுரமாக இருப்பதும் உண்டு. சில அகநாழிகைகள் நீண்ட அரைவட்டமாக அமைந்திருக்கும். மிகச் சில, வட்ட வடிவமாக இருக்கும்.

#### படவிளக்கம்

1. திருவுண்ணாழிகை (அகநாழிகை)யும் இடைநாழிகையும். சதுர அமைப்பு. திருவுண்ணாழிகைக்கு கருப்பக்கிருகம் என்றும், இடைநாழிகைக்கு அர்த்த மண்டபம் என்றும் பெயர்கள் வழங்குகின்றன.
2. வட்ட வடிவமான அகநாழிகை. காஞ்சிபுரத்துச் சுரகரீசுவரர் கோயிலும், புதுக்கோட்டையைச் சேர்ந்த நார்த்தா மலை, மேல்மலையில் உள்ள




கோவிற் கட்டடத் தரையமைப்பு
(விளக்கம் அடுத்த பக்கம் பார்க்க)

விஜயாலய சோழீசுவரமும், மதுரையை அடுத்த கள்ளரழகர் கோயிலும் இவ்விதத் தரையமைப்பையும் உடலமைப்பையும் கொண்டவை.

3. பாறைக் கோயிலின் தரையமைப்பு. மகேந்திர வர்மன் காலத்துக் குகைக்கோயில்கள் எல்லாம் பொதுவாக இந்த அமைப்பையுடையன.

4. நீண்ட சதுரமுள்ள அகநாழிகை. யானைக் கோயிலின் தரையமைப்பு.

5. நீண்ட அரைவட்டமுள்ள அகநாழிகை அமைப்பு. மாமல்லபுரத்துக் கணேச ரதம் முதலியவை.

6. பனைமலையில் (தென் ஆர்க்காட்டு மாவட்டம், விழுப்புரம் தாலுக்கா) உள்ள பல்லவர் காலத்துக் கோயிலின் தரையமைப்பு. மத்தியில் உள்ள அகநாழிகையைச் சூழ்ந்து நாற்புறமும் அகநாழிகைகள் இருக்கின்றன.

7. காஞ்சிபுரம் கயிலாசநாதர் கோயில் (இராஜசிம்மேசுவரம்) தரையமைப்பு. மத்தியில் உள்ள அகநாழியைச் சூழ்ந்து வேறு அகநாழிகைகள் அமைந்துள்ளன.

காஞ்சிபுரத்துக் கயிலாசநாதர் கோயிலிலும் பனைமலைக் கோயிலிலும் கருவறையைச் சார்ந்து வேறு சில கருவறைகளும் அமைக்கப்பட்டுள்ளன. இவை இரண்டும் விதிவிலக்காக, அபூர்வமாக ஏற்பட்டவை.

பல்லவ அரசர் காலம்வரையில், திருவுண்ணாழிகையும் இடைநாழிகையும் (கருவறையும் அர்த்தமண்டபமும்) ஆகிய கட்டடங்களே அமைக்கப்பட்டன. இவற்றைச் சூழ்ந்து வேறு மண்டபங்கள் பெரும்பாலும் அமைக்கப்படவில்லை.

கி.பி. 10ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு, சோழ அரசர்கள் கருவறையைச் சுற்றிலும் மண்டபங்களை

அமைத்தனர். அன்றியும், அர்த்த மண்டபத்துக்கு முன்பு இன்னொரு மகா மண்டபத்தையும் அமைத்தனர். ஏனென்றால், 10ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு நாயன்மார்கள், ஆழ்வார்கள் முதலிய மூர்த்தங்களை அமைக்க வேண்டிய நிலைமை ஏற்பட்டது. இவ்வாறு அக நாழிகையைச் சூழ்ந்து சுற்று மண்டபங்களை அமைத்த படியினாலே, அம் மண்டபங்கள், மத்திய கோயிலின் பார்வையையும் அழகையும் மறைத்துவிட்டன. சில இடங்களில் மத்திய கோயிலின் விமானம் தெரியாதபடி மறைத்துவிட்டன. அன்றியும், கோயிலுக்குள் வெளிச்சம் புகாதபடி செய்து, பட்டப் பகலிலும் கோயிலில் இருள் நிறைந்துவிட்டது. நமது கோயில்களில் பட்டப் பகலிலும் இருள் சூழ்ந்திருப்பதன் காரணம், இந்தச் சுற்று மண்டபங்களே ஆகும்.

மாடக்கோயில்கள்

மாடக்கோயில்கள் என்றால், மாடிபோல் அமைந்த கோயில்கள் என்பது பொருள். ஒன்றின்மேல் ஒன்றாக ஒன்பது நிலைகளையுடைய மாடக் கோயில்களைச் சிற்ப நூல்கள் கூறுகின்றன. இக்காலத்தில் இரண்டு நிலை, மூன்று நிலையுள்ள மாடகோயிலகளதாம் இருக்கின்றன. மாடக்கோயில்கள், பல்லவர் காலத்துக்கு முனபே, அதாவது, கி.பி. 6ஆம் நூற்றாண்டுககு முன்னரே இருந்தன. ஆனால், அக்காலத்து மாடக்கோயில்கள் செங்கல்லினால் அமைக்கப்பட்டவை. ஆகவே, அவை இக்காலத்துல் நிலைபெற்றிருக்கவில்லை. அக்காலத்திலேயே அழிந்துவிட்டன.

சீகாழிக்குக் கிழக்கே ஐந்து மைலில் உள்ள திருநாங்கூர் திருமணி மாடக்கோயிலைத் திருமங்கை ஆழ்வார் தமது பெரிய திருமொழியில் கூறுகிறார். இன்னொரு மாடக்கோயிலாகிய திருநறையூர் மாடக்கோயிலையும்

திருமங்கை ஆழ்வார் குறிப்பிடுகிறார்; அதனைச் சோழன் செங்கணான் கட்டியதாகவும் கூறுகிறார்.

"செம்பியன்கோச் செங்கணான் சேர்ந்த கோயில்
திருநறையூர் மணிமாடம் சேர்மின்களே"

என்று அவர் கூறியது காண்க. திருநறையூருக்கு இப்போது நாச்சியார் கோயில் என்று பெயர் கூறுகிறார்கள்.

திருவைகல் என்னும் ஊரில் இருந்த ஒரு மாடக் கோயிலைத் திருஞானசம்பந்தர் கூறுகிறார். திருவைகல் மாடக்கோயில் என்பதே அக்கோயிலின் பெயராக இருந்தது. அதனைக் கட்டியவரும் செங்கட் சோழன் என்று ஞானசம்பந்தர் தமது தேவாரத்தில் கூறுகிறார்.

இந்த மாடக்கோயில்களைச் சோழன் செங்கணான் கட்டியதாக ஆழ்வாரும் நாயனாரும் கூறுகிறபடியினாலே, இவை கி.பி. 7ஆம் நூற்றாண்டுக்கு முன்னே கட்டப் பட்டவை என்றும், இவை செங்கல்லினால் கட்டப் பட்டவை என்றும் தெரிகின்றன. ஆனால், இந்த மாடக் கோயில்கள் எத்தனை நிலையை (மாடிகளை)க் கொண் டிருந்தன என்பது தெரியவில்லை. மூன்று நிலை மாடக் கோயில்களாகத்தான் இருந்திருக்கவேண்டும்.

மாமல்லபுரத்து மாடக்கோயில்கள்

கி. பி. 7ஆம் நூற்றாண்டுக்கு முன்னர் இருந்த செங்கற் கட்டடங்களாலான மாடக் கோயில்களின் மாதிரியைப் பல்லவ அரசனான நரசிம்மவர்மன் (மாமல்லன்) மாமல்லபுரமாகிய மகாபலிபுரத்திலே கருங் கல்லினால் அமைத்திருக்கிறான். அவை இரண்டு நிலை, மூன்று நிலையுள்ள மாடக்கோயில்களின் மாதிரி[1] ஆகும்.

அர்ச்சுனன் இரதம் என்று இப்போது தவறாகப் பெயர் வழங்கப்படுகிற கோயில், இரண்டு நிலை (இரண்டு

---

[1] மாதிரி — Model.

அடுக்கு) மாடக்கோயிலின் அமைப்பு ஆகும். தருமராஜ இரதம் என்று தவருகப் பெயர் வழங்குகிற இன்னொரு மாடக்கோயில், மூன்று நிலையுள்ள மாடக்கோயிலின் அமைப்பு ஆகும்.[1] சகாதேவ இரதம் என்பதும் மூன்று நிலையுடைய மாடக்கோயிலின் அமைப்பு ஆகும். இந்த மாடக்கோயில்களின் அமைப்பைக் கருங்கற் பாறையில் அமைத்த காலம் கி.பி. 7ஆம் நூற்ருண்டின் மத்திய காலம் ஆம். இவை பழைய செங்கற் கட்டடங்களாலாய மாடக்கோயில்களின் உருவ அமைப்புடையவை.

## வேறு மாடக்கோயில்கள்

கற்றளியாக அமைக்கப்பட்டு இப்போதும் வழி பாட்டில் உள்ள மாடக்கோயில்கள் இரண்டு உள்ளன. அவை காஞ்சிபுரத்தில் உள்ள பரமேச்சுர விண்ணகரமும், உத்தரமேரூர் சுந்தரவரதப் பெருமாள் ஆலயமும் ஆகும். காஞ்சிபுரத்துப் பரமேச்சுர விண்ணகரத்தை இப் போது வைகுண்டப் பெருமாள் கோயில் என்று கூறுவார் கள். இக்கோயிலைப் பரமேசுவர வர்மன் என்னும் பல்லவ அரசன் கி.பி. 8ஆம் நூற்ருண்டின் தொடக் கத்தில் கட்டினன். இதனைத் திருமங்கையாழ்வார் பாடி யிருக்கிருர். இது மூன்று நிலையுள்ள மாடக்கோயில். ஆனல், இரண்டாவது மாடிக்குமட்டும் படிகள் உள்ளன; மூன்ருவது மாடிக்குப் படிகள் இல்லை. பண்டைக் காலத் தில் மரப்படிகள் அமைந்திருந்தன போலும்; இப்போது மரப்படிகளும் இல்லை. இது மூன்று நிலை மாடக்கோயில் ஆகும்.

உத்தரமேரூர் மாடக்கோயிலும் மூன்று நிலை மாடக் கோயிலாகும். இதனைக் கட்டியவன் நந்திவர்ம பல்லவ மல்லன் என்னும் பல்லவ அரசன். இவன் கி.பி. 730

---

[1] தருமராஜ இரதம் என்பதற்குப் பழைய பெயர் அத்யந்தகாம பல்லவேச்சரம் என்பது.

முதல் 795 வரையில் அரசாண்டான். எனவே, இக் கோயில் கி.பி. 8ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் கட்டப்பட்டதாகும். இக்கோயிலைக் கட்டிய பல்லவனுடைய உருவச் சிற்பமும் இக்கோயிலில் இருக்கிறது.

கட்டட அமைப்பும் உறுப்புகளும்

கோயிற் கட்டட அமைப்பைப் பற்றியும் அவற்றின் உறுப்புகளைப் பற்றியும் ஆகம நூல்களிலும் சிற்ப சாஸ்திரங்களிலும் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இந்நூலில் கட்டடக் கலையின் பொதுவான செய்திகளை மேலோட்டமாகக் கூறுகிறபடியால், அவற்றைப் பற்றிய விரிவான செய்திகளை இங்குக் கூறவில்லை. முக்கியமான சிலவற்றைச் சுருக்கமாகக் கூறுவோம்.

கோயிற் கட்டடத்தில் ஆறு உறுப்புகள் உண்டு. அவையாவன :—1. அடி; 2. உடல்; 3. தோள்; 4. கழுத்து; 5. தலை; 6. முடி.

இந்தப் பெயர்களுக்குச் சிற்ப நூலில் வேறு பெயர்கள் கூறப்படுகின்றன. அப்பெயர்களாவன :—1. அதிஷ்டானம்; 2. பாதம்; 3. மஞ்சம்; 4. கண்டம்; 5. பண்டிகை; 6. ஸ்தூபி. இவற்றை விளக்குவோம்.

1. அடி அல்லது தரையமைப்பு. இதற்கு அதிஷ்டானம், மசூரகம், ஆதாரம், தலம், பூமி முதலிய பெயர்கள் உண்டு.

2. உடல் அல்லது திருவுண்ணாழிகை. இதற்குக் கால், பாதம், ஸ்தம்பம், கம்பம் முதலிய பெயர்கள் சிற்ப நூலில் கூறப்படுகின்றன. இப்பெயர்கள் திருவுண்ணாழிகையின் (கருவறையின்) சுவர்களைக் குறிக்கின்றன.[1]

3. தோள் அல்லது தளவரிசை. இதற்குப் பிரஸ்தரம், மஞ்சம், கபோதம் முதலிய பெயர்கள் உள்ளன.

[1] திருவுண்ணாழிகைக்கு அகநாழிகை என்றும் பெயர் உண்டு.

4. கழுத்து. இதற்குக் கண்டம், களம், கர்ணம் முதலிய பெயர்கள் உண்டு.

5. தலை அல்லது கூரை. இதற்குப் பண்டிகை, சிகரம், மஸ்தசம், சிரம் முதலிய பெயர்கள் உள்ளன.

6. முடி அல்லது கலசம். இதற்கு ஸ்தூபி, சிகை, குளம் முதலிய பெயர்கள் உண்டு.

கோயிற் கட்டடத்தில் அமையவேண்டிய இந்த ஆறு உறுப்புகளுக்கும் சில அளவுகள் உள்ளன. அந்த அளவுகளையெல்லாம் தீர ஆராயவேண்டியதில்லை. ஆனால், பொதுவான அளவை மட்டும் தெரிந்துகொள்வோம். அந்த அளவுகளாவன :—

1. அடி அல்லது அதிஷ்டானத்தின் உயரம் 1 பங்கு.
2. உடல் அல்லது பாதத்தின் உயரம் 2 பங்கு.
3. தோள் அல்லது மஞ்சத்தின் உயரம் 1 பங்கு.
4. கழுத்து அல்லது கண்டத்தின் உயரம் 1 பங்கு.
5. தலை அல்லது பண்டிகையின் உயரம் 2 பங்கு.
6. முடி அல்லது ஸ்தூபியின் உயரம் 1 பங்கு.

இந்த அளவு ஒரு நிலையையுடைய சாதாரணக் கோயில்களுக்காகும். இதுவன்றி, வேறு சில அளவுகளும் ஒருநிலைக் கோலையிலுக்கு உண்டு.

இரண்டு நிலை மாடக்கோயிலின் அமைப்பு :— 1. தரை, 2. சுவர், 3. தளவரிசை, 4. சுவர், 5. தளவரிசை, 6. கழுத்து, 7. கூரை, 8. கலசம் என அமையும்.

மூன்று நிலை மாடக்கோயிலின் அமைப்பு :— 1. தரை, 2. சுவர். 3. தளவரிசை, 4. சுவர், 5. தளவரிசை, 6. சுவர், 7. தளவரிசை, 8. கழுத்து, 9. கூரை, 10. கலசம் என இவ்வாறு அமையும். கோயிற் கட்டடத்தின் பல்வேறு அமைப்புகளைச் சிற்ப நூலில் கண்டுகொள்க.

கோயிற் கட்டடங்கள் கட்டப்படும் பொருள்களைக் கொண்டு அவை மூன்று பெயர்களைப் பெறுகின்றன.




கோயிற் கட்டட உறுப்புகள்.

அவை சுத்தம், மிஸ்ரம், சங்கீர்ணம் என்பன. முழுவதும் மரத்தினாலோ, செங்கல்லினாலோ அல்லதுகருங்கல்லினாலோ கட்டப்பட்ட கோயில்களுக்குச் சுத்த கட்டடம் என்றும், இரண்டு பொருள்களைக் கலந்து அமைக்கப் பட்ட கோயில்களுக்கு மிஸ்ர கட்டடம் என்றும். இரண்டிற்கு மேற்பட்ட பொருள்களால் கட்டப்பட்ட கோயில்களுக்குச் சங்கீர்ணம் என்றும் பெயர்கள் கூறப் படுகின்றன.

## கோயிலின் வகைகள்

கடவுள் அல்லது தெய்வங்கள் எழுந்தருளியிருக்கும் திருவுண்ணாழிகைக்கு விமானம் என்பது பெயர். இந்த விமானங்களின் வெவ்வேறு விதமான அமைப்பைக் கொண்டு இவற்றிற்கு வெவ்வேறு பெயர் கூறுவர். முக்கியமாகக் கூரையின் அமைப்புக் கொண்டு அவைகளுக்கு வெவ்வேறு பெயர்களைக் கூறுகிறார்கள். திருநாவுக்கரசு சுவாமிகள் தமது திருஅடைவு திருத் தாண்டகத்தின் 5ஆம் செய்யுளில், கோயிற் கட்டட வகைகளின் பெயர்களைக் கூறுகிறார். அச்செய்யுள் இது:

"பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும்
பெருங்கோயில் எழுபதினோ டெட்டு மற்றும்
கரக்கோயில் கடிபொழில்சூழ் ஞாழற் கோயில்
கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில்
இருக்கோதி மறையவர்கள் வழிபட் டேத்தும்
இளங்கோயில் மணிக்கோயில் ஆலக் கோயில்
திருக்கோயில் சிவனுறையும் கோயில் சூழ்ந்து
தாழ்ந்திறைஞ்சத் தீவினைகள் தீரு மன்றே."

இப்பாடலிலே, சோழன் செங்கணான் கட்டிய எழுபத் தெட்டுக் கோயில்களைக் கூறிய பின்னர், கரக்கோயில், ஞாழற் கோயில், கொகுடிக் கோயில், இளங்கோயில்,

மணிக்கோயில், ஆலக்கோயில் என்று சில வகையான கோயில்களைக் கூறுகிறார்.

சிற்ப நூல்கள் விஜயம், ஸ்ரீபோகம், ஸ்ரீவிசாலம், ஸ்கந்தகாந்தம், ஸ்ரீகரம், ஹஸ்திபிருஷ்டம், கேசரம் என்னும் ஏழு விதமான கோயில்களைக் கூறுகின்றன. காமிகாகமமும் இப்பெயர்களைக் கூறுகிறது.

திருநாவுக்கரசு சுவாமிகள் தமிழ்ப் பெயரால் கூறுகிறதையே சிற்ப நூல்கள் வடமொழிப் பெயரினால் கூறுகின்றன. பெயர் வேற்றுமையே தவிரப் பொருள் வேற்றுமை இல்லை. எந்தெந்தக் கோயில்களுக்கு எந்தெந்தப் பெயர் என்பதற்குச் சிற்ப நூல்களில் விளக்கம் கூறப்படுகின்றன. ஆனால், திருநாவுக்கரசர் கூறுகிற பெயர்களுக்கு விளக்கம் இப்போது தெரியாதபடியினாலே, அவை எந்தெந்தக் கோயிலின் பெயர்கள் என்பது தெரியவில்லை. இதைக் கண்டறியவேண்டியது நமது நாட்டுச் சிற்பக் கலைஞர்களின் கடமையாகும். ஆயினும், நம்மால் இயன்ற அளவு இதனை ஆராய்வோம்.

**ஆலக்கோயில்**

முதலில், ஆலக்கோயில் என்று திருநாவுக்கரசர் கூறியகோயிலை ஆராய்வோம். ஆலக்கோயில் என்பது ஆனைக்கோயில் என்பதன் மரூஉ. சிலர் ஆலமரத்தினால் கட்டப்பட்ட கோயில் என்று கருதுகிறார்கள். இது தவறு. ஆலமரம், கட்டடம் கட்டுவதற்கு ஏற்ற உறுதியான மரம் அன்று. ஆலமரத்தினால் கட்டடம் கட்டும் வழக்கம் இல்லை. வேறு சிலர் ஆலமரத்தின்கீழ் அமைந்த கோயில் என்று கருதுகிறார்கள். இதுவும் தவறு. ஆலக்கோயில் என்பது கோயிற் கட்டட வகைகளில் ஒன்றென்பது தெளிவானது. ஆலக்கோயிற் கட்டடம், மேலே கூறியது போல ஆனைக்கோயில் வடிவமாக இருக்கும். சிற்ப சாஸ்

திரங்களில் இக்கோயில் கஜபிருஷ்ட விமானக் கோயில் என்றும், ஹஸ்திபிருஷ்ட விமானக் கோயில் என்றும் கூறப்படுகிறது. கஜம், ஹஸ்தி என்னும் சொற்களுக்கு யானை என்பது பொருள். யானையின் முதுகு போன்று இந்தக் கோயிலின் கூரை அமைந்திருப்பதனால் இதற்கு இப்பெயர் ஏற்பட்டது. தமிழிலே இது யானைக் கோயில் என்று வழங்கப்பட்டுப் பிறகு ஆலக்கோயில் என்று மருவிற்று. சுந்தரமூர்த்தி நாயனார் திருக்கச்சூர் ஆலக்கோயிலைக் கூறுகிறார்.



ஆலக்கோயில் (ஆனைக் கோயில்).

திருவொற்றியூர், வடதிருமுல்லைவாயில், திருவேற்காடு, திருக்கழுக்குன்றத்து பக்தவத்சல ஈசுவரர் கோயில், திருவானைக்கா முதலியவை ஆலக்கோயில் எனப்படும் கஜபிருஷ்ட விமானக் கோயில்கள் ஆகும். மகாபலிபுரத்துச் சகாதேவ ரதம் என்னும் கோயிலும் மூன்று நிலையுள்ள மாடக்கோயிலாக அமைந்த ஆலக் கோயிலாகும்.[1]

[1] இதைப் பற்றி இந்நூலாசிரியர் எழுதியுள்ள அண்மையில் வெளியாகியிருக்கிற 'ஆனைக்கோயில்' என்னும் நூலில் விளக்கமாகக் காணலாம்.

இளங்கோயில்

இளங்கோயில் என்பதனைச் சிலர் பாலாலயம் என்று கூறுவர். பழைய கோயிலைப் புதுப்பிக்கிறபோது, கோயில் திருப்பணி முடிகிறவரையில் அக்கோயில் மூலவிக்கிர கத்தைத் தற்காலிகமாக அமைக்கப்பட்ட சிறு கட்டடத் தில் வைத்திருப்பார்கள். இந்தத் தற்காலிகமான ஆலயத்திற்குப் பாலாலயம் என்பது பெயர். ஆனால், திருநாவுக்கரசர் கூறுகிற இளங்கோயில் பாலாலயம் அன்று; கோயிற் கட்டட வகைகளில் ஒன்றைத்தான் இளங்கோயில் என்று கூறுகிறார். சிலர், இளங்கோயில் என்பது முருகன் கோயிலுக்குப் பெயர் என்று கூறுவர். இதுவும் சரியன்று.

இளங்கோயிலைப் பற்றித் தேவாரத்திலும் சாசனங் களிலும் கூறப்படுகிறது. சோழநாட்டு மீயச்சூர் கோயில் இளங்கோயில் என்று அப்பர் சுவாமிகள் கூறுகிறார். மீயச்சூர் என்பது இப்போது பேரளம் என்று வழங்கப்படுகிறது. "கடம்பூர் இளங்கோயிலும் கயிலாய நாதனையே காணலாமே" என்று அப்பர் சுவாமிகள் கூறுகிறார். ஆகவே, கடம்பூர் கோயிலும் இளங்கோயில் எனத் தெரிகிறது. (கடம்பூர்க் கோயிலில் கரக்கோயிலும் உண்டு. கடம்பூர்க் கரக்கோயிலைத் திருநாவுக்கரசரே வேறு இடத்தில் கூறுகிறார். கடம்பூர்க் கோயிலிலே கரக் கோயில், இளங்கோயில் என்னும் இரண்டு வகையான கட்டடங்களும் உள்ளன.)

பூதத்தாழ்வார் தமது இரண்டாந்திருவந்தாதியில்[1] 'வெள்ளத் திளங்கோயி'லைக் கூறுகிறார். இராஜராஜன் காலத்துச் சாசனம் ஒன்று கடம்பூர் இளங்கோயிலைக் குறிப்பிடுகிறது.[2] திருச்சி மாவட்டம் குளித்தலை தாலுகா

---

1 S. I. I. 11, VOL. No. 66.

2 172 of 1914.

இரத்தினகிரி என்னும் ஊரில் உள்ள சாசனம், பாண்டியன் ஜடாவர்மன் ஆன திரிபுவன சக்கரவர்த்தி சுந்தர பாண்டிய தேவர் (கி.பி. 1254—1264) காலத்தில் எழுதப்பட்டது. இதில், திருவாலீசுரமுடைய நாயனார், திருக்கயிலாயமுடைய நாயனார் என்னும் இரண்டு கோயில்களும் இளங்கோயில்கள் என்று கூறப்படுகின்றன.[1]



இளங்கோயில் (ஸ்ரீகரக் கோயில்) விமானம்.

சித்தூர் மாவட்டம் சந்திரகிரி தாலுக்கா திருச்சோகினூரில் இருந்த ஒரு கோயில் இளங்கோயில் என்று பெயர்பெற்றிருந்தது. இக்கோயிலில் இருந்த கடவுளுக்குத் திரு இளங்கோயில் பெருமானடிகள் என்று பெயர் இருந்தது. இக்கோயில் சில காலத்துக்கு முன்னர் இடிக்கப்பட்டது.

நெல்லூர் மாவட்டம் நெல்லூரில் உள்ள ஒரு வடமொழிச் சாசனம் எளங்கோயில் ஒன்றைக் கூறுகிறது. இளங்கோயிலைத்தான் இந்த வடமொழிச் சாசனம்

[1] 3680 of 1908; S. I. I. VOL. X II, No. 43.

எளங் கோயில் என்று கூறுகிறது.[1] சிலர் கருதுவதுபோல் இளங்கோயில் பாலாலயமாக இருந்தால், இந்த வடமொழிச் சாசனம் வடமொழிச் சொல்லாகிய பாலாலயம் என்பதையே கூறியிருக்கும். ஆனால், இளங் கோயில் என்று கூறுகிறபடியால், இளங்கோயில் பாலாலயம் அன்று என்பதும், கோயில் அமைப்பில் ஒரு வகையானது என்றும் ஐயமறத் தெரிகிறது.

தமிழில் இளங்கோயில் என்று கூறப்படுவதும், சிற்ப நூல்களில் ஸ்ரீகரக் கோயில் என்று கூறப்படுவதும் ஒரே விதமான கட்டடம் என்று தோன்றுகிறது. ஸ்ரீகரம் என்னும் கட்டடம் நான்கு பட்டையான விமானத்தை (சிகரத்தை) உடையது என்று காமிகாகமமும் சிற்ப நூல் களும் கூறுகின்றன. மகாபலிபுரத்து திரௌபதையம்மன் இரதம் என்று இப்போது தவறாகப் பெயர் வழங்கப் படுகிற கொற்றவை கோயில் அமைப்பு, ஸ்ரீகரம் என்னும் அமைப்பையுடையது. இளங்கோயில் என்பதும் இதுவாக இருக்கக்கூடும்.

கரக்கோயில்

திருக்கடம்பூர் கோயில் அமைப்பு கரக்கோயில் அமைப்பு என்று திருநாவுக்கரசர் தமது தேவாரத்தில் கூறியிருக்கிறார். (திருக்கடம்பூர் கோயிலில் இளங் கோயிலும் ஒன்று உண்டு.) சுந்தரமூர்த்தி சுவாமிகளும் கடம்பூர்க் கரக்கோயிலைக் குறிப்பிடுகிறார்.[2]

கரக்கோயிலைக் கற்கோயில் என்னும் சொல்லின் திரிபு என்று சிலர் கருதுவது தவறு. கரக்கோயில் என்பது கோயில் வகையில் ஒரு விதத்தைக் குறிக்கிறது.

விஜயம் என்று சிற்ப நூல்கள் கூறுகிற கட்டட அமைப்பு, கரக்கோயிலாக இருக்கக்கூடும் என்று

---

[1] Epi. Indi. Vol. P. III,136—146

[2] திருக்கோத்திட்டையும் திருக்கோவலூரும், 5ஆம் பாட்டு.

தோன்றுகிறது. வட்டமான விமானத்தை (சிகரத்தை) உடைய கோயிற் கட்டடத்திற்கு விஜயம் என்று சிற்ப நூல்கள் பெயர் கூறுகின்றன.

ஞாழற் கோயில்

ஞாழற் கோயில் என்பதைக் குங்கும மரத்தினால் அமைக்கப்பட்ட கோயில் என்று சிலர் கூறுவர். இது தவறு. ஞாழல் என்று குங்கும மரத்திற்கும் பெயர் உண்டு. ஆனால், ஞாழல் மரத்தினால் அமைக்கப்பட்ட கோயிலுக்கு ஞாழற் கோயில் என்று கூறுவது தவறு. அப்படியானால், ஏனைய மரங்களினாலே அமைக்கப்பட்ட கோயில்களுக்கு அந்தந்த மரங்களின் பெயர் அமைய வேண்டுமல்லவா? அப்படிப் பெயர் இல்லாதபடியினாலே, ஞாழல் மரத்தினாலே கட்டப்பட்ட கோயில் என்று கூறுவது தவறு. ஞாழற்கோயில் என்பது கோயில் வகையில் ஒரு வகையாகும்.

இந்தக் கோயிலின் அமைப்பு எப்படி இருக்கும் என்று இப்போது கண்டறிய முடியவில்லை.

கொகுடிக் கோயில்

கொகுடி என்பது ஒரு மரத்தின் பெயர் என்றும், அம்மரத்தினால் அமைக்கப்பட்ட கோயிலுக்குக் கொகுடிக் கோயில் என்று பெயர் உண்டாயிற்றென்றும் சிலர் கூறுவர். இதுவும் தவறு. "கருப்பறியல் பொருப்பனைய கொகுடிக் கோயில்" என்று கூறுகிறார் திருநாவுக்கரசர். சுந்தரரும் திருக்கருப்பறியலூர்ப் பதிகத்தில் இக் கொகுடிக் கோயிலைக் குறிப்பிடுகிறார். ஞானசம்பந்தரும்,

"குற்றமறியாத பெருமான் கொகுடிக் கோயிற்
கற்றெனை விருப்பது கருப்பறிய லூரே"

என்று கூறுகிறார்.

இந்தக் கோயிலின் விமான (சிகர) அமைப்பு எப்படி இருந்ததென்று திட்டமாகச் சொல்வதற்கில்லை. ஆயி

னும் ஸ்ரீபோகம், ஸ்ரீவிசாலம் என்று சிற்ப நூல்கள் கூறுகிற கட்டடங்களில் ஒன்ருகக் கொகுடிக் கோயில் இருக்கக் கூடும் என்று ஊகிக்கலாம். வட்டமான சிகரத்தை உடையது விஜயம் என்று பெயர்பெறும் என்பதை மேலே (கரக்கோயிலில்) கூறினேம். அந்த வட்டமான சிகரம் கர்ண கூடத்துடன் அமையப்பெற்ருல் ஸ்ரீபோகம் எனப் பெயர்பெறும் என்றும், அதுவே நடுவில் பத்ர வரிசையுடன் கூடியதாளுல் ஸ்ரீவிசாலம் எனப் பெயர்



கரக்கோயில் (விஜயம்) விமானம்

பெறும் என்றும் காமிகாகமம்[1] கூறுகிறது. கொகுடிக் கோயில் என்பது ஸ்ரீபோகம் அல்லது ஸ்ரீவிசாலமாக இருக்கக்கூடும் என்று கருதலாம்.

**மணிக்கோயில்**

**மணிக்கோயிலின்** அமைப்பைப் பற்றியும் நமக்கு ஒன்றும் தெரியவில்லை. ஆயினும், எட்டுப் பட்டை அல் லது ஆறு பட்டையான சிகரத்தையுடைய கோயிலாக இருக்கக்கூடும் என்று யூகிக்கலாம். சிற்ப நூல்கள் **ஸ்கந்த காந்தம்** என்று கூறுகிற விமானக் கோயிலே மணிக்

---

[1] செய்யுள் 54.

[2] ஏகபூமியாதி விதி படலம்.

கோயில் என்று கருதுவது பொருத்தமாகத் தோன்றுகிறது.

எட்டுப் பட்டையையுடைய சிகரத்தையும் கழுத்தையும் உடையது ஸ்கந்த காந்தம் என்று காமிகாகமம் கூறுகிறது. ஆறு பட்டையையுடைய சிகரத்தையும் கழுத்தையும் உடையது ஸ்கந்த காந்தம் என்று வேறு பாடபேதத்தையும் காமிகாகமம் கூறுகிறது. [1]



மணிக்கோயில் (ஸ்கந்த காந்தம்) விமானம்

நமது நாட்டில் ஆறுபட்டையுள்ள சிகரக்கோயில்கள் அதிகமாகக் காணப்படவில்லை. எட்டுப் பட்டையுள்ள சிகரக் கோயில்கள் அதிகமாகக் காணப்படுகின்றன. மணிக்கோயில் என்பது ஆறு அல்லது எட்டுப் பட்டையான சிகரமுள்ள கோயிலாக இருக்கக்கூடும்.

திருநாவுக்கரசர் கூறிய கரக்கோயில், ஞாழற் கோயில், கொகுடிக்கோயில், இளங்கோயில், மணிக் கோயில், ஆலக்கோயில் என்னும் கோயில் வகைகளையும் சிற்ப நூல்களில் வடமொழிப் பெயராகக் கூறப்படுகிற விஜயம், ஸ்ரீபோகம், ஸ்ரீவிசாலம், ஸ்கந்த காந்தம், ஸ்ரீகரம், ஹஸ்திபிருஷ்டம் என்னும் கோயில் வகைகளை

1 60 ஆவது ஏகபூமியாதி விதி படலம்.

யும் ஒருவாறு பொருத்திக் கூறினேம். இவற்றில் ஆலக்கோயிலும் ஹஸ்திபிருஷ்டமும் ஒன்றே என்பதில் ஐயப்பாடு ஒன்றும் இல்லை. ஆனல், ஏனைய பொருத்தங்கள் என்னுடைய ஊகமேயொழிய முடிந்த முடிபு அன்று. இவற்றைப் பற்றிச் சிற்ப சாஸ்திரிகள் ஆராய்ந்து முடிவு கூறவேண்டும்.

உயரமான கோயில்கள்

மிக உயரமான விமானத்தையுடையது தஞ்சாவூர் பெரிய கோயில். இராஜராஜசோழன் இதைக் கி.பி. 1000இல் கட்டினன். இது 190 அடி உயரம் உள்ளது. இதைப்போன்று அமைப்பும் உயரமும் உடையது, கங்கை கொண்ட சோழபுரத்தில் உள்ள கோயில். இது கி.பி. 1025இல் கட்டப்பட்டது. மற்ருேர் உயரமான கோயில் திரிபுவனத்துக் கம்பேசுவரர் கோயில். இவை சோழர்களால் கட்டப்பட்டவை. இவையே மிக உயரமான கோயில்கள். பிற்காலத்துக் கோயில்கள் இவ்வளவு உயரமாகக் கட்டப்படவில்லை.

காலப்பகுப்பு

திராவிடக் கட்டடக் கலையைப் பழைய காலம், பல்லவர்காலம், சோழர்காலம், பாண்டியர் காலம், விஜயநகர அரசர் காலம் என்று ஐந்து காலப்பகுதியாகப் பிரித்துக் கூறுவர்.

பழைய காலம் என்பது கி.பி. 600-க்கு முற்பட்ட காலம். அந்தக் காலத்தில், கோயிற் கட்டட அமைப்புகள் முழுவதும் அமையப்பெற்று, மரத்தினலும் செங்கற்களினலும் அமைக்கப்பட்டன.

பல்லவர் காலக் கட்டடம் என்பது கி.பி. 600 முதல் 900 வரையில் உள்ள காலம். இந்தக் காலத்தில் கற்றளிகள் (செங்கற்களுக்குப் பதிலாகக் கருங்கற்களை ஒன்றின்

மேல் ஒன்றாக அடுக்கிக் கட்டப்பட்ட கோயிற் கட்டடங்கள்) ஏற்பட்டன.

சோழர் காலம் என்பது பிற்காலச் சோழர் காலம். இது கி.பி. 900 முதல் 1300 வரையில் உள்ள காலம். இந்தக் காலத்தில் சோழ அரசர்கள் புதிதாகக் கற்றளிகளை அமைத்ததோடு, பழைய செங்கற் கோயில்களை இடித்து அக்கோயில்களைக் கற்றளியாகப் புதுப்பித்தார்கள். அன்றியும், ஆழ்வார்களுக்கும் நாயன்மார்களுக்கும் கோயில்கள் அமைக்கப்பட்ட காலமும் இதுவே. மேலும், சிவன் கோயில்களிலே அம்மன் சந்நிதிகள் தனியாகக் கட்டப்பட்ட காலமும் இதுவே. சோழர் காலத்துக்கு முன்பு, சிவன் கோயில்களில் அம்மனுக்கென்று தனியாகக் கோயில் இல்லை. இச்செய்தியைச் சோழர் காலத்துச்சாசனங்களிலிருந்து அறிகிறோம்.



பல்லவர் காலத்துத் தூண்கள்

பாண்டியர் கட்டடக் காலம் என்பது கி.பி. 1300 முதல் 1500 வரையில் உள்ளகாலம்.

விஜயநகர அரசர் கட்டடக்காலம் என்பது கி. பி. 1500 முதல் 1700 வரையில் உள்ள காலம்.

கட்டடக் கலையைப் பற்றி பல்லவ, சோழ, பாண்டிய, விஜயநகர காலம் என்று சொல்லும்போது, இந்தக் காலங்களில் கோயிற் கட்டடங்களில் வெவ்வேறு மாறு தல்கள் ஏற்பட்டன என்று கருதக்கூடாது. பெரிய மாறு



பிற்காலத்துத் தூண்கள்

தல்கள் ஒன்றும் ஏற்படவில்லை. ஆனால், தூண்கள், கர்ண கூடு, கோஷ்ட பஞ்சரம் முதலிய உறுப்புகளில் அந் தந்தக் காலத்தில் சில மாறுதல்கள் ஏற்பட்டன. இந்த மாறுதல்களைக் கொண்டுதான் மேற்சொன்னபடி காலத் தைப் பிரித்திருக்கிறார்கள்.

குகைக்கோயில்களும் பாறைக்கோயில்களும் கி.பி. 600இல் இருந்து 850 வரையில் தமிழ் நாட்டிலே முதன் முதல் அமைக்கப்பட்டன. குகைக்கோயிலைத் தமிழ் நாட்டிலே முதன் முதலாக அமைத்தவன்,

முன்னர் சொல்லியபடி, மகேந்திரவர்மன் என்னும் பல்லவ அரசன். அவனுக்குப் பிறகு அவன் மகன் நரசிம்ம வர்மனை மாமல்லன், மாமல்லபுரத்தில் (மகாபலிபுரத்தில்) குகைக் கோயில்களையும் இரதக் கோயில்கள் என்னும் பாறைக்கோயில்களையும் அமைத்தான். அவனுக்குப் பிறகு வந்த பல்லவ அரசர்கள் சாளுவன்குப்பம் முதலிய இடங்களில் குகைக் கோயில் அமைத்தார்கள். பிறகு புதுக்கோட்டையிலும் பாண்டிய நாட்டிலும் குகைக் கோயில்கள் அமைக்கப் பட்டன. கி.பி. 850—க்குப் பிறகு குகைக் கோயில்கள் அமைக்கும் வழக்கம் மறைந்துவிட்டது.

கி.பி. 1000—க்குப் பிறகு அரசாண்ட சோழ, பாண்டிய, விஜயநகர அரசர்கள் குகைக் கோயிலை அமைக்கவில்லை. அவர்கள் கற்றளிகளைத்தான் அமைத்தார்கள்.

### சுவர் உறுப்புகள்

இனி, திருவுண்ணாழிகை(கருவறை)யின் சுவரின் வெளிப்புறத்தில் அமைக்கப்படும் உறுப்புகளைப் பற்றிக் கூறுவோம் கருவறைக்கு முன்புறத்தில் அதைச் சார்ந்து சிறிய இடைகழி ஒன்று உண்டு. இதற்கு இடைநாழிகை (அர்த்த மண்டபம்) என்பது பெயர். இடைநாழிகை கருவறையின் ஒரு பகுதியேயாகும். அர்த்த மண்டபத்தின் வாயிலில் இருபுறத்திலும் துவாரபாலகர் உருவங்கள் அமைக்கப்பட்டிருக்கும்.

### கோஷ்ட பஞ்சரம்

திருவுண்ணாழிகை என்னும் கருவறைச் சுவரின் வெளிப்புறத்திலும், அர்த்த மண்டபச் சுவரின் (இடைநாழிகையின்) வெளிப்புறத்திலும் கோஷ்ட பஞ்சரம், கும்ப பஞ்சரம் என்னும் உறுப்புகள் அமைக்கப்படுவது வழக்கம். கருவறையின் வெளிப்புறச் சுவர்களில்,

பின்புறச் சுவரில் ஒன்றும் வலப்புற இடப்புறச் சுவர் களில் ஒவ்வொன்றும் ஆக மூன்று கோஷ்ட பஞ்சரங் களும், கருவறையைச் சேர்ந்துள்ள அர்த்த மண்டபத் தின் வலப்புற இடப்புறச் சுவர்களின் வெளிப்புறத்தில் ஒவ்வொன்று ஆக இரண்டு கோஷ்ட பஞ்சரங்களும் ஆக ஐந்து கோஷ்ட பஞ்சரங்கள் அமைக்கப்படும்.

கோஷ்ட பஞ்சரம் என்பது சிற்ப வேலைகள் அமைந்த மாடங்கள் ஆகும். கோஷ்ட பஞ்சரம் என்னும் இம்மாடங்களிலே கணபதி, தட்சிணாமூர்த்தி, இலிங்



கோஷ்ட பஞ்சரம்



கும்ப பஞ்சரம்

கோத்பவ மூர்த்தி, பிரமன், நாராயணி (கொற்றவை) உருவங்கள் அமைக்கப்பட்டிருக்கும். கோஷ்ட பஞ்சரங் களிலே இந்த தெய்வ உருவங்களை அமைக்கும் வழக்கம் சோழர் காலத்திலே கி.பி. 10ஆம் நூற்றாண்டுக்குப் பிறகு ஏற்பட்டிருக்கவேண்டும். ஏனென்றால், பல்லவர்

காலத்துக் கோயில்களிலே கோஷ்ட பஞ்சரங்களில் இத் தெய்வ உருவங்கள் அமைக்கப்படவில்லை.

கும்ப பஞ்சரம்

கோஷ்ட பஞ்சரங்களுக்கு இடையே கும்ப பஞ்சரம் என்னும் சிற்ப உறுப்பு அமைக்கப்பட்டிருக்கும். கும்ப பஞ்சரம் என்பது, அடியில் குடம் போன்றதும், மேலே கொடிச்சிற்ப வேலையமைந்ததும் ஆன சிற்ப வேலை யாகும். இவற்றின் அமைப்புகளைப் படத்தில் காண்க.

தோள் உறுப்புகள்

தோள் என்னும் பிரஸ்தரத்தின்மேலே, கர்ண கூடு, பஞ்சரம், சாலை என்னும் உறுப்புகள் உண்டு. கர்ணகூடு என்பது பிரஸ்தரத்தின் கடைசி மூலையில் அமைக்கப்




தோள் உறுப்புகள்
(1) கர்ணகூடு; (2) பஞ்சரம்; (3) சாலை

படும் உறுப்பு. சாலை என்பது பிரஸ்தரத்தின் மத்தியில் அமைக்கப்படும். பஞ்சரம் என்பது கர்ண கூட்டுக்கும் சாலைக்கும் இடையில் அமைக்கப்படுகிற சிற்றுறுப்பு.

இனி, பண்டைக் காலத்திலிருந்து நாளடைவில் கோயில்கள் கட்டட அமைப்பில் எப்படி வளர்ச்சி யுடைந்தன என்பதைக் கூறுவோம்.

பண்டைக் காலத்திலே, அதாவது, பல்லவர் காலம் வரையில் (கி.பி. 10ஆம் நூற்றாண்டுக்கு முன்பு), திருமால், சிவபெருமான், கொற்றவை முதலிய தெய்வங்களுக்குத் தனித்தனியே கோயில்கள் இருந்தன. திருவுண்ணாழிகை(கருவறை)யும் அதைச் சார்ந்து அர்த்த மண்டபமும்மட்டும் அக்காலத்தில் இருந்தன. வேறு மண்டபங்களோ துணைக்கோயில்களோ அக்காலத்தில் இல்லை.

பிற்காலத்திலே, அர்த்த மண்டபத்தைச் சார்ந்தாற் போல் கோயில் முன்புறத்திலே முகமண்டபம் அமைக்கும் வழக்கம் ஏற்பட்டது.

பரிவார ஆலயங்கள்

கி.பி. 10ஆம் நூற்றாண்டிற்குப் பிறகு, பிற்காலச் சோழர் ஆட்சியில், சிவன் கோயில்களில் அம்மனுக்கென்று தனி ஆலயங்கள் கட்டப்பட்டன. இக்காலத்துக்கு முன்பு சிவன் கோயில்களிலே அம்மனுக்கென்று தனி ஆலயங்கள் இருந்ததில்லை. தேவாரத்திலே அப்பர். சம்பந்தர், சுந்தரர் ஆகிய நாயன்மார்கள் சிவபெருமானையும் தேவியையும் பாடியது உண்மையே. ஆனால், அக்காலத்தில் தேவிக்கென்று சிவன் கோயிலில் தனியாக ஆலயம் இருந்ததில்லை. தேவிக்கென்று தனி ஆலயம் இருந்தால், அது சிவபெருமான் ஆலயத்துடன் சேர்ந்து இராமல் தனியாக இருந்தது. உதாரணமாக, காஞ்சிபுரத்துக் காமாட்சியம்மை ஆலயத்தைக் கூறலாம். நாயன்மார்கள் இந்தத் தேவி ஆலயத்தைக் குறிப்பிடுகிறார்கள். ஆனால், இந்த ஆலயம் சிவன் கோயிலில் சேராத தனி ஆலயம் என்பதை நினைவில் வைக்க வேண்டும்.

கி.பி. 10ஆம் நூற்றாண்டிற்குப் பின்னர், சோழ அரசரால் அம்மன் ஆலயங்கள் சிவன் கோயில்களில்

அமைக்கப்பட்டன. அம்மன் ஆலயங்கள் புதிதாக அமைக்கப்பட்டதைக் கல்வெட்டுச் சாசனங்களினாலும் அறியலாம்.

சோழர்கள் காலத்திலே அடியார், நாயன்மார்களுக்கும் உருவங்கள் அமைக்கப்பட்டன. இந்த அடியார்கள், நாயன்மார்களின் உருவங்கள், திருவுண்ணாழிகையின் வெளிப்புறத்தில், அதைச் சூழ்ந்துள்ள சுற்றாலை மண்டபங்களில் அமைக்கப்பட்டன. இவ்வாறு திருவுண்ணாழிகைக்கு வெளியே சுற்றாலை மண்டபங்கள் அமைக்கப்பட்டபடியால், மூலக்கோயிலின் கட்டட அமைப்பு மறைக்கப்பட்டது. அன்றியும், சுற்றாலை மண்டபத்தில் சாளரங்கள் அமைக்காதபடியால், பட்டம் பகலிலும் இருள் சூழ்ந்திருக்கிறது. மூலக்கோயிலின் விமானம் மட்டும் தூரப்பார்வைக்குத் தெரியும். மூலக்கோயிலின் அதிஷ்டானத்திலும் (அடிப்புறம்), சுவரிலும் சிற்ப வேலைகள் அமைந்து, அப் பகுதிகளே கட்டடத்தின் அழகான பகுதிகளாக விளங்குபவை. அப்பகுதியைச் சுற்றிலும் மண்டபம் அமைத்து மறைத்துவிட்டதல்லாமல், இருள் சூழும்படியும் செய்துவிட்டார்கள். இப்படிச் செய்தது மூலக்கோயிலின் அழகையே கெடுத்துவிட்டது. இப்போதுள்ள கோயில்களில் பெரும்பான்மையும் மூலக்கோயிலின் கட்டட அழகு மறைக்கப்பட்டவையே. சுற்றாலை மண்டபங்களால் மறைக்கப்படாத மூலக்கோயில்கள் மிகச் சிலவே இக்காலத்தில் உள்ளன.

அண்மையில், மிகப் பழைமை வாய்ந்த பாடல் பெற்ற ஒரு கோயிலுக்கு, அக் கோயிலின் அமைப்பை ஆராய்வதற்காகச் சென்றேன். மூலக்கோயிலின் முன்புறத்தில் மிகப்பெரிய முகமண்டபமும், அதனைச் சார்ந்து மூலக்கோயிலைச் சூழ்ந்து சுற்றாலை மண்டபங்களும்

அமைந்து அக் கோயிலை மிகவும் இருளுடையதாக்கி விட்டது. இது எல்லாக் கோயில்களிலும் உள்ள சாதாரண நிலை. நான் இக்கோயிலுக்குச் சென்றது பகல்வேளை. அந்த நேரத்திலும் இக்கோயில் மிகமிக இருளடைந்து காணப்பட்டது. மீண்டும் வெளியே வந்த போது, மறுபிறப்புப் பிறந்தவன்போல உணர்ந்தேன். அவ்வளவு இருள் அடர்ந்து அச்சமாக இருந்தது.

பெரிய சிவன் கோயில்களிலே பிள்ளையார் கோயிலும் முருகன் ஆலயமும் இப்போது காணப்படு கின்றன. இக்கோயில்களும் பிற்காலத்திலே ஏற் பட்டவை. முருகனுக்கும் கணபதிக்கும் தனித்தனி யாகப் பண்டைக் காலத்தில் கோயில்கள் இருந்தது உண்மையே. ஆனால், சிவன் கோயிலுக்குள் பரிவார ஆலயங்களாக முருகன், கணபதி, அம்பிகை முதலியவர் களுக்குத் தனித்தனியே பண்டைக் காலத்தில் ஆலயங் கள் இல்லை.

பதினறுகால் மண்டபம், நூற்றுக்கால் மண்டபம், ஆயிரக்கால் மண்டபம் முதலிய மண்டபங்களும் சோழர் காலத்திலும் அதற்குப் பிற்காலத்திலும் ஏற்பட்டவையே.

கோயில்களின் வாயில்களில் இப்போதுள்ள முகப்புக் கோபுரங்கள் பண்டைக் காலத்தில் இல்லை. இக் கோபு ரங்கள் பிற்காலத்திலே, விஜயநகர அரசரான கிருஷ்ண தேவர் காலத்திலே ஏற்பட்டவை. இவற்றிற்கு இராய கோபுரம் என்று பெயர் உண்டு. சிவன் கோயில்களிலே சனீசுவரன் கோயில், நவக்கிரகக் கோயில் என்பவை மிகப் பிற்காலத்திலே புதிதாகச் சேர்க்கப்பட்டவை.

பெருமாள் கோயில்களிலும் கி.பி. 10ஆம் நூற்றாண்டுக்குமுன்பு 'தாயார் சந்நிதி' இருந்ததில்லை. சைவ சமயமும் வைணவ சமயமும் தனித்தனி

மதமாகப் பிரிந்த பிறகு, சைவர்கள் சிவன் கோயிலில் அம்மனுக்குத் தனியாக ஆலயம் அமைத்துக்கொண்டது போல, வைணவர்களும் திருமகளுக்குத் 'தாயார் சந்நிதி' அமைத்துக்கொண்டார்கள். அன்றியும், ஆழ்வார்களுக்கும், ஆசாரியார்களுக்கும், மற்றும் தெய்வங்களுக்கும் உருவங்கள் அமைத்து வழிபட்டார்கள். ஆகவே, பெருமாள் கோயில்களிலும் வெவ்வேறு ஆலயங்களும் மண்டபங்களும் புதிதாக அமைக்கப் பட்டன.

திருமால் கோயில்களில் ஆண்டாள் சந்நிதி என்று ஒரு கோயில் உண்டு. ஆண்டாள் ஆழ்வார்களில் ஒருவர். ஆனல், இவருக்கு மட்டும் சிறப்பாக ஒவ்வொரு பெருமாள் கோயிலிலும் தனியே ஆலயம் உண்டு. விஜயநகரத்து அரசனுன கிருஷ்ணதேவராயன் மிகுந்த வைணவப் பற்றும் ஆண்டாள் பக்தியும் உடையவனுதலின், அவன் வைணவக் கோயில்களில் ஆண்டாள் சந்நிதியைப் புதிதாக அமைத்தான். அவன் காலத்திலும் அதற்குப் பிறகும் ஏற்பட்டவையே ஆண்டாள் சந்நிதிகள்.

இதுவே கோயிற் கட்டடங்களின் வரலாறு. மூலக் கோயிலைச் சூழ்ந்து சுற்றுலை மண்டபங்கள் அமைக்கப் பட்டபடியால், மூலக்கோயிலை அடிமுதல் முடிவரையில் ஒரே சமயத்தில் பார்த்து மகிழ முடியாமலிருப்பதைக் குறிப்பிட விரும்புகிறேன். கோயிலுக்கு வெளியே சற்றுத் தூரத்தில் சென்று மூலக்கோயிலின் மேற்புற அமைப்பைப் பார்த்து மகிழவேண்டியிருக்கிறது. முழு உருவத்தை ஒருமித்துப் பார்த்தால்தான் அக்கட்டடக் கலையின் அழகை நன்கு உணரலாம். மேற்பகுதி, அடிப் பகுதி இரண்டையும் ஒருமிக்கப் பார்த்து மகிழும் வாய்ப்பு மிவகு சில கோயில்களிலேதான் அமைந்

துள்ளது. ஆனால், பல்லவர் காலத்துக் கோயில்களில் இந்த அழகை முழுவதும் காணலாம்.

சிற்பாசாரியர்

கோயிற் கட்டடங்களையும் சிற்பங்களையும் அமைத்த சிற்பாசாரியர்களின் பெயர்கள் தெரியவில்லை. அவர்கள் பெயர்கள் மறைந்துவிட்டன. ஆயினும், சில பெயர்கள் மட்டும் தெரிகின்றன.

மகாபலிபுரம் என்னும் மாமல்லபுரத்துக் கோயில்களையும் பாறைக்கோயில்களையும் அமைத்த சிற்பாசாரியர்களின் பெயர்கள் சில, மகாபலிபுரத்துக்கடுத்த பூஞ்சேரிக் கிராமத்துக்கு அருகில், நொண்டி வீரப்பன் குதிரைத் தொட்டி என்னும் ஒரு பாறையில் பொறிக்கப் பட்டுள்ளன.[1] இப்பெயர்கள் மாமல்லபுரத்துச் சிற்பங்களை அமைத்த சிற்பாசாரிகளின் பெயர்கள் என்று கருதப்படுகின்றன. அவை:—

1. கேவாத பெருந்தச்சன், 2. குணமல்லன், 3. பய்யமிழிப்பான், 4. சாதமுக்கியன், 5. கலியாணி, 6. திருவொற்றியூர் அபாஜர், 7. கொல்லன் ஸேமகன்.

கி.பி. 8ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் இருந்த தண்டி என்னும் ஆசிரியர், தாம் எழுதிய அவந்தி சுந்தரி கதை என்னும் வடமொழி நூலில் லலிதாலயர் என்னும் சிற்பக் கலைஞரைக் குறிப்பிடுகிறார். தண்டி ஆசிரியர் காலத்தில், லலிதாலயர் மாமல்லபுரத்தில் சிற்பக் கலைஞராக இருந்தார் என்றும், இக் கலைஞரே சூத்ரக சரிதம் என்னும் கதையைத் தமிழில் எழுதினார் என்றும் தண்டியாசிரியர் கூறுகிறார்.

இரண்டாம் விக்கிரமாதித்யன் (733—745), காஞ்சிபுரத்தை வென்ற பிறகு, அந்நகரிலிருந்த குண்டன் என்னும் சிற்பியை அழைத்துக்கொண்டு

[1] S. I. I. Vol. XII, No. 23A.

போய், அச்சிற்பியைக்கொண்டு பட்டடைக்கல் என்னும் ஊரில் ஒரு கோயிலைக் கட்டினான். இக்கோயில் இப்போது விருபாக்ஷ ஈசுவரர் கோயில் என்று வழங்கப் படுகிறது. இந்த அரசன், இச்சிற்பக் கலைஞருக்குத் திரிபுவனாசார்யர் என்றும், அநிவாரிதாசாரியார் என்றும் சிறப்புப் பெயர்களைக் கொடுத்தான்.

முதலாங் குலோத்துங்க சோழன் காலத்தில், புரிசையில் திருப்படக்காருடைய மகாதேவர் கோயில் கட்டப் பட்டது. இதனைக் கட்டிய சிற்பாசாரியின் பெயர், சந்திரசேகரன் ரவி என்னும் சோழேந்திர சிம்ம ஆசாரி என்பது.[1]

திருவொற்றியூர் மூலக்கோயில், இராஜேந்திர சோழன் காலத்தில் புதுப்பிக்கப்பட்டது. இக்கோயிலைப் புதுப்பித்துக் கட்டிய சிற்பியின் பெயர் வீரசோழ தச்சன் என்னும் சிறப்புப் பெயரையுடைய ரவி என்பவர்.[2] சிதம்பரத்து வடக்குக் கோபுரத்தைக் கட்டிய சிற்பியரின் உருவங்களும் பெயர்களும் வடக்குக் கோபுரத்து உட்சுவரில் எழுதப்பட்டுள்ளன. அப்பெயர்களாவன; விருத்தகிரியில் கேசவப் பெருமாள்; அவர் மகன் விசுவமூத்து. திருப்பிறைக்கோடை ஆசாரி திருமருங்கன்; அவருடைய தம்பி காரணாச்சாரி.

[1] Epi. Rep. 1911, P. 72. [2] S. I. I. Vol. IV, P. 185.

# சிற்பக் கலை

கட்டடக் கலைக்கு அடுத்தபடியாக உள்ளது சிற்பக் கலை. கட்டடக் கலையைவிட சிற்பக் கலை நுட்பமானது. மனிதன் விலங்கு பறவை மரம் செடி மலை கடல் முதலிய இயற்கை உருவங்களையும், கடவுள் தெய்வம் தேவர் அரக்கர் முதலிய கற்பனை உருவங்களையும் அழகுபட அமைப்பதே சிற்பக் கலையாகும். காவியப் புலவர் கற்பனைகளை அமைத்து நூல் எழுதுவது போலவே, சிற்பக் கலைஞரும் (ஓவியப் புலவருங்கூட) தமது கற்பனை களினாலே பலவகையான சிற்பங்களை அமைக்கிறார்கள்.

சிற்பக் கலைகள், கண்ணையுங் கருத்தையும் கவர்ந்து மனத்திற்கு இன்பங் கொடுக்கும் இனிய கலைகள். அவற் றின் அழகும் அமைப்பும் எல்லோருக்கும் உணர்ச்சி கொடுத்து மகிழ்வூட்டுகின்றன. ஆனால், அவற்றில் சிறிது கருத்தூன்றிக் காணவேண்டும். சற்றுக் கலைச்சுவையும் இருக்கவேண்டும். இக் கலையுணர்வு பெற்றோர், அழகிய கலைப்பொருகள்களைக் காணுந் தோறும் புதியதோர் இன்ப உலகத்திலே வாழ்கிறார்கள்.

### சிற்பம் அமைக்கும் பொருள்கள்

மெழுகு, அரக்கு, சுதை, மரம், தந்தம், கல், பஞ்ச லோகம் முதலியவைகளினால் சிற்ப உருவங்கள் அமைக்கப்படுகின்றன.

> "கல்லும் உலோகமும் செங்கலும் மரமும்
> மண்ணும் சுதையும் தந்தமும் வண்ணமும்
> கண்ட சருக்கரையும் மெழுகும் என்றிவை
> பத்தே சிற்பத் தொழிற்குறுப் பாவன"

என்பது திவாகர நிகண்டு.[1]

---

[1] 12ஆவது பல்பொருட் கூட்டத்தொரு பெயர்த் தொகுதி.

"வழுவறு மரனும் மண்ணும் கல்லும்
எழுதிய பாவையும்......"

என்றும்,

"மண்ணினும் கல்லினும் மரத்தினும் சுவரினும்
கண்ணிய தெய்வதம் காட்டுநர் வகுக்க"

என்றும் மணிமேகலைக் காவியம் கூறுகிறது.[1]

நமது கோயில்களிலே சிற்பக் கலை பெரிதும் இடம் பெற்றிருக்கிறது. சிற்ப உருவங்கள் அமையாத கோயிற் கட்டடங்கள் இல்லை என்றே கூறலாம். கோயிலின் தரை, சுவர், சிகரம், கோபுரம், மண்டபம், தூண்கள், வாயில் நிலைகள் முதலிய கட்டடங்களின் எல்லா இடங்களிலும் சிற்ப உருவங்கள் அமைந்துள்ளன.

காவிரிப்பூம்பட்டினத்திலிருந்த மாளிகைகளிலே, சுதையினால் செய்யப்பட்ட சிற்ப உருவங்கள் அமைக்கப் பட்டிருந்ததை, இந்திர விழாவின்போது அந்நகரத்துக்கு வந்த மக்கள் கண்டு களித்தனர் என்று மணிமேகலை என்னும் நூல் கூறுகிறது. அப்பகுதி இது:

"வம்ப மாக்கள் கம்பலை மூதூர்
சுடுமண் ஓங்கிய நெடுநிலை மனைதொறும்
மையறு படிவத்து வானவர் முதலா
எவ்வகை உயிர்களும் உவமங் காட்டி
வெண்சுதை விளக்கத்து வித்தகர் இயற்றிய
கண்கவர் ஓவியங் கண்டு நிற்றுநரும்."[2]

## இரண்டு வகைச் சிற்பம்

சிற்ப உருவங்களை முழு உருவங்கள் என்றும் புடைப்புச் சிற்பங்கள் என்றும் இரண்டு விதமாகப் பிரிக்கலாம். முழு உருவச் சிற்பம் என்பது, பொருள்

---

[1] 21ஆவது காதை. [2] மலர்வனம் புக்க காதை, 126-131.

களின் முன்புறம் பின்புறம் முதலிய முழு உருவமும் தெரிய அமைக்கப்படுவது. புடைப்புச் சிற்பம்* என்பது, பொருள்களின் ஒருபுறம் மட்டும் தெரியும்படி சுவர்களிலும் பலகைகளிலும் அமைக்கப்படுவது. இவ்விரண்டுவிதச் சிற்ப உருவங்களும் கோயில்களிலே அமைக்கப்படுகின்றன.

தத்ரூப உருவங்கள்

தமிழ் நாட்டுச் சிற்பக் கலை, பாரத நாட்டுச் சிற்பக் கலையைப் போலவே, சமயத்தை அடிப்படையாகக் கொண்டு வளர்ச்சி பெற்றிருக்கிறது. ஆகவே, தெய்வ உருவங்கள் நமது நாட்டுச் சிற்பக் கலையில் பெரிதும் முதன்மை பெற்றுள்ளன. கிரேக்க தேசம், உரோமாபுரி முதலிய மேல்நாடுகளிலே மனித தத்ரூப சிற்ப உருவங்கள்[1] சிறப்பாக வளர்ச்சி பெற்றதுபோல நமது நாட்டில் மனித தத்ரூப சிற்பக் கலை (ஓரளவு பயிலப் பட்டதே யல்லாமல்) முழு வளர்ச்சி யடையவில்லை. இதன் காரணம், நம்மவர் தத்ரூப உருவங்களைச் செய்து வைக்கும் வழக்கத்தை அதிகமாகக் கொள்ளாதது தான். ஆனால், நமது நாட்டில் கற்பனை உருவச் சிற்பங்கள் பெரிதும் வளர்ந்திருக்கின்றன.

கல்லும் உலோகமும்

நமது நாட்டுச் சிற்பக் கலை சமயத்தை அடிப்படையாகக் கொண்டு வளர்ச்சி பெற்றது என்று கூறினோம். சைவ வைணவச் சிற்ப உருவங்களை ஆதிகாலத்தில் மரத்தினாலும், சுதையினாலும், பஞ்சலோகத்தினாலும் செய்து அமைத்தார்கள். இப்போதுங்கூட மரத்தினாலும் சுதையினாலும் செய்யப்பட்ட தெய்வ உருவங்கள் சில கோயில்களில் உள்ளன. உதாரணமாக, உத்தரமேரூர் சுந்தர வரதப் பெருமாள் கோயிலி

*Bas-relief. [1]Portrait sculpture,

லுள்ள தெய்வ உருவங்கள் மரத்தினுல் செய்யப்பட்டவையே. திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாள், காஞ்சி பாண்டவ தூதப் பெருமாள், மகாபலிபுரத்துத் தலசயனப் பெருமாள், திருவிடந்தை வராகப் பெருமாள் முதலிய கோயில்களில் உள்ள உருவங்கள் சுதையினுல் ஆனவையே.

கருங்கல்லினுலும் பஞ்ச லோகத்தினுலும் சிற்ப உருவங்கள் உண்டாக்கப்பட்டது கி.பி. 7 ஆம் நூற்ருண்டிலே ஆகும். பல்லவ அரசரும் பிற்காலச் சோழரும் இவற்றினுல் சிற்பங்களை அமைத்தார்கள்.

சிவன், திருமால் முதலிய தெய்வ உருவங்கள் மனித உருவமாகக் கற்பிக்கப்பட்டு, மனித உருவம் போலவே செய்யப்படுகின்றன. ஆனுல், அந்த உருவங்கள் எலும்பு, சதை, நரம்பு முதலியவை அமைந்த, மானிட உறுப்புள்ள* தெய்வ உருவங்களாக அமைக்கப்படுவதில்லை.

### யவன நாட்டுச் சிற்பமும் நமது நாட்டுச் சிற்பமும்

அயல் நாட்டுத் தெய்வச் சிற்ப உருவங்களுக்கும் நமது நாட்டுத் தெய்வச் சிற்ப உருவங்களுக்கும் உள்ள வேற்றுமைகளை இந்நூலாசிரியர் எழுதியுள்ள "இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம்" என்னும் நூலில் எழுதியிருப்பதை இங்குக் கூறுவது பொருந்தும். அது:

"அயல் நாட்டுச் சிற்பங்கள், உருவங்களை உள்ளது உள்ளவாறே, கண்ணுக்குத் தோன்றுகிறபடியே அமைக்கப்படுவன. நமது நாட்டுச் சிற்பங்கள், உள்ளதை உள்ளபடியே காட்டும் நோக்கமுடையனவல்ல; சிற்ப உருவங்

*Anotomy

களின் மூலமாக ஏதேனும் கருத்தை அல்லது உணர்ச்சியைக் காட்டும் நோக்கம் உடையன. இயற்கை உருவத்தை உள்ளது உள்ளபடியே விளக்குவது அயல் நாட்டுச் சிற்பம்; உணர்ச்சிகளையும் கருத்துகளையும் காட்டுவதற்குக் கருவியாக உள்ளது நமது நாட்டுச் சிற்பம். மனித உருவத்தின் அழகையும் செவ்வியையும் சிற்பக் கலையில் நன்கு பொருந்தும்படி அக்கலையை மிக உன்னத நிலையில் வளர்த்து உலகத்திலே பெரும்புகழ் படைத்த கிரேக்க நாட்டுச் சிற்பிகள், தமது நாட்டுக் கடவுளர்களின் உருவங்களைச் சிற்ப உருவமாக அமைத்த போது, மனித உடலமைப்பு எவ்வளவு அழகாக அமையக்கூடுமோ அவ்வளவு அழகையும் அமையப் பொருத்தி அத்தெய்வ உருவங்களை அமைத்தார்கள். அவர்கள் அமைத்த ஜூலியஸ், வீனஸ் முதலிய கடவுளர்களின் சிற்ப உருவங்களைக் காணும்போது, மானிட உடல் அமைப்பின் சீரிய இயல்பு அவைகளில் அமையப் பெற்றிருப்பதால், உண்மையிலேயே அவை நமது கண்ணையுங் கருத்தையும் கவர்ந்து மகிழ்ச்சியளிக்கின்றன.

"ஆனால், நமது கருத்து அச்சிற்பங்களின் உருவ அமைப்பின் அழகோடு தங்கி நிற்கிறதே தவிர, அதற்கப்பால் செல்வதில்லை. அவை, மக்கள் நிலைக்கு மேம்பட்ட கடவுளின் உருவங்கள் என்கிற உணர்ச்சியைக்கூட உண்டாக்குவதில்லை.

"நமது நாட்டுச் சிற்ப உருவங்களில் அமைக்கப்பட்ட தெய்வ உருவங்களோ அத்தகையன அல்ல. நமது நாட்டுச் சிற்ப உருவங்களில், கிரேக்கச் சிற்பங்களைப் போன்று, இயற்கையோடியைந்த அழகிய உடலமைப்பு காணப்படாதது உண்மைதான். ஆனால், இச்சிற்பங்களைக் காணும்போது, நமது உள்ளமும் கருத்தும் இவ்

உருவங்களில் மட்டும் நின்றுவிடவில்லை; இவ்வுருவங்கள் நமது கருத்தை எங்கேயோ இழுத்துச் சென்று ஏதேனும் உணர்ச்சிகளையும் கருத்துகளையும் ஊட்டுகின்றன. ஆகவே, நமது சிற்பங்கள், அயல் நாட்டுச் சிற்பங்களைப் போன்று, வெறும் அழகிய காட்சிப் பொருள்களாக மட்டும் இல்லாமல், காட்சிக்கும் அப்பால் சென்று கருத்துகளையும் உணர்ச்சிகளையும் ஊட்டுகின்றன. இந்த இயல்பு சிற்பக் கலைக்கு மட்டுமன்று; நமது நாட்டு ஓவியக் கலைக்கும் பொருந்தும்.

"எனவே, பொருள்களின் இயற்கை உருவத்தை அப்படியே காட்டுவது அயல் நாட்டுச் சிற்பக் கலையின் நோக்கம்; உணர்ச்சிகளையும் கருத்துகளையும் உருவங்கள் மூலமாக வெளிப்படுத்துவது நமது நாட்டுச் சிற்பக் கலையின் நோக்கம் என்னும் உண்மையை மறவாமல் மனத்திற் கொள்ளவேண்டும்."*

**சிற்பத்தில் மறைபொருள்கள்**

நமது தெய்வத் திருவுருவங்கள் குறிப்புப் பொருளைப் புலப்படுத்துகின்றவை. (குறிப்புப் பொருள்—Symbolism.) அதாவது, மறைபொருளாகக் கருத்துகளை வெளிப்படுத்துகின்றவை. உதாரணமாக ஒன்றைக் காட்டுவோம்.

கடவுள் எங்கும் பரந்து இருக்கிறார் என்பது எல்லாச் சமயத்தவரின் கொள்கை. உருவம் இல்லாமல் பரந்து இருக்கிற கடவுளைச் சைவரும் வைணவரும் தமது கடவுள் திருவுருவத்தில் மறைபொருளாக அமைத்துக் காட்டியிருக்கிறார்கள். அவர்கள் கடவுள் உருவங்களுக்கு நான்கு கைகள் அல்லது எட்டுக் கைகளை அமைத்துக்

---

*"இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம்": பக்கம் 14, 15—மயிலை சீனி. வேங்கடசாமி எழுதியது.

காட்டியிருக்கிறார்கள். திசைகளை நான்காகவும் எட்டாகவும் கூறுவது மரபு. ஆகையினாலே, எல்லாத் திசைகளிலும் பரந்து இருக்கிறவர் கடவுள் என்பதைக் காட்ட, நான்கு கைகளை அல்லது எட்டுக் கைகளைக் கற்பித்திருக்கிறார்கள். இவ்வாறே, கடவுளின் மற்றக் குணங்களுக்கும் குறிப்புப் பொருளைக் கற்பித்துத் தெய்வ உருவங்களை அமைத்திருக்கிறார்கள். இக் குறிப்புப் பொருள்களையெல்லாம் விளக்கிக் கூறுவதற்கு இது இடமன்று; காமிகாகமம் முதலிய நூல்களில் கண்டு கொள்க; இந்நூலாசிரியர் எழுதியுள்ள "இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம்" என்னும் நூலிலும் கண்டுகொள்க.

பண்டைக் காலத்திலே தமிழர் கோயில்களிலே தெய்வத்தை வழிபட்டபோது, இப்போது வைத்து வணங்கப்படுகிற தெய்வ உருவங்களை வைத்து வணங்கவில்லை. அந்தந்தத் தெய்வங்களின் அடையாளங்களை மட்டும் வைத்து வணங்கினார்கள். உதாரணமாக, முருகனை வணங்கிய தமிழர், இப்போது வணங்கப்படுகிற முருகன் உருவத்தை வைத்து வணங்காமல், முருகனுடைய படையாகிய வேலை மட்டும் வைத்து வணங்கினார்கள்; இந்திரனுடைய உருவத்தை வைத்து வணங்காமல் அவனுடைய வச்சிராயுதத்தை வைத்து வணங்கினார்கள்; அல்லது அவனது வெள்ளை யானை, கற்பகத் தரு இவற்றின் உருவங்களை வைத்து வணங்கினார்கள். இதைத்தான் வேற்கோட்டம், வச்சிரக் கோட்டம், அமரர்தருக் கோட்டம், வெள்ளை யானைக் கோட்டம் என்று சிலப்பதிகாரம் கூறுகிறது.

இதனால் அறியப்படுவது என்னவென்றால், இப்போது கோயில்களில் வைத்து வணங்கப்படும் தெய்வ உருவங்கள் பண்டைக் காலத்தில் சிற்ப உருவங்களாக

அமைக்கப்படவில்லை என்பதும், அவை பிற்காலத்தில் அமைக்கப்பட்டவை என்பதும் ஆகும்.

**பலவகை மூர்த்தங்கள்**

சைவர், சிவபெருமானுடைய திருவுருவத்தைப் பல மூர்த்தங்களாகக் கற்பித்தார்கள்; வைணவர்களும், திருமாலுடைய திருவுருவத்தைப் பல மூர்த்தங்களாகக் கற்பித்தார்கள். கடவுளின் பலவித ஆற்றல்களைக் காட்டுவதற்காகவே இவ்வாறு பல்வேறு மூர்த்தங்களைக் கற்பித்தார்கள். கடவுளின் சக்தியை அம்மன், தேவி என்னும் பெயரால் பெண் உருவமாகக் கற்பித்தார்கள்.

சிவபெருமானுடைய திருவுருவங்களை இருந்த கோலமாகவும், நின்ற கோலமாகவும், ஆடுங் கோலமாகவும் கற்பித்தார்கள். திருமால் திருவுருவங்களை நின்ற கோலமாகவும், இருந்த கோலமாகவும், கிடந்த (படுத்த) கோலமாகவும் கற்பித்தார்கள். இதனை நின்றான், இருந்தான், கிடந்தான் உருவம் என்பர்.

மற்றும் கணபதி, முருகன், அம்மன் முதலிய தெய்வ உருவங்களையும் கற்பித்தார்கள்.

**பௌத்த, ஜைன சிற்பங்கள்**

நமது நாட்டிலே பண்டைக் காலத்திலே (கி.மு. 3ஆம் நூற்றாண்டுமுதல் கி.பி. 10ஆம் நூற்றாண்டு வரையில்) பௌத்த மதம் நன்றாகச் செழித்திருந்தது.* அக்காலத்தில் பௌத்தராக இருந்த தமிழர்கள், புத்தர் உருவத்தையும் பௌத்தத் தெய்வ உருவங்களையும் வழிபட்டார்கள். அவர்களும், ஆதிகாலத்தில் புத்தர் திருவுருவத்தை வைத்து வணங்காமல், பாத பீடிகை,

---

*இந்நூலாசிரியர் எழுதியுள்ள "பௌத்தமும் தமிழும்", "சமணமும் தமிழும்" என்னும் நூல்களில் காண்க.

தருமச் சக்கரம் ஆகிய புத்தருடைய அடையாளங்களை வைத்து வணங்கினார்கள். பிறகு புத்தருடைய திருவுருவம் கற்பிக்கப்பட்ட காலத்தில், அவர்கள் புத்தருடைய உருவத்தை வைத்து வணங்கினார்கள்.

மணிமேகலை, சிலப்பதிகாரம் என்னும் நூல்கள் புத்தர் வணக்கத்தைக் கூறும்போது பாதபீடிகையையும் தரும பீடிகையையும் கூறுகின்றன. ஏனென்றால், அந்தக் காலத்திலே புத்தருடைய உருவம் கற்பிக்கப்பட்டுச் சிற்பிகளால் சிற்ப உருவங்களாகச் செய்யப்படவில்லை. இதனாலே மணிமேகலை, சிலப்பதிகாரம் ஆகிய நூல்கள் மிகப் பழைமையானவை என்பது தெரிகிறது.

புத்தருடைய உருவம் கற்பிக்கப்பட்ட பிற்காலத்திலே அவ்வுருவத்தை நின்ற கோலமாகவும், இருந்த கோலமாகவும், கிடந்த (படுத்த) கோலமாகவும் சிற்பிகள் அமைத்தார்கள். வைணவர், திருமால் திருவுருவத்தை இவ்வாறே மூன்று விதமாக அமைத்ததை மேலே கூறினோம்.

பௌத்த மதத்தைப்போலவே ஜைன சமயமும் (சமண மதம்) பண்டைக் காலத்திலே நமது நாட்டிலே சிறப்படைந்திருந்தது.* சமண சமயத்தைச் சேர்ந்த தமிழர், அருகக் கடவுளின் உருவத்தையும் தீர்த்தங்கரர்களின் உருவத்தையும் வணங்கினார்கள்.

ஒரு செய்தி

பௌத்த ஜைன மதத்துக்கும் சைவ வைணவ சமயத்துக்கும் சிற்ப உருவ அமைப்பில் உள்ள ஒரு நுட்பமான செய்தியைக் கூற விரும்புகிறேன். அது என்னவென்றால், பௌத்தரின் புத்த உருவத்துக்கும் ஜைனரின் தீர்த்தங்கரர் (அருகர்) உருவங்களுக்கும் இரண்டு கைகள்மட்டும் உண்டு. ஆனால், அவர்களின்

சிறு தெய்வங்களுக்கு நான்கு அல்லது எட்டுக் கைகள் உள்ளன. இதற்கு நேர்மாறான அமைப்பு சைவ வைணவ உருவங்களில் காணப்படுகின்றன. சிவன் அல்லது திருமால் உருவங்களுக்கு நான்கு அல்லது எட்டுக் கைகள் இருக்கின்றன. ஆனால், சைவ வைணவ சிறு தெய்வங்களுக்கு இரண்டு கைகள் மட்டுமே இருக்கின்றன.

உதாரணமாக, பௌத்தர்களின் சிறு தெய்வமாகிய அவலோகிதர், புத்த பதவியடையும் நிலையை அடைந்திருந்தாலும், அப்பதவியை இன்னும் அடையாத படியால், சிறு தெய்வமாகக் கருதப்படுகிறார். ஆகையினாலே, அவருக்கு நான்கு கைகளைக் கற்பித்திருக்கிறார்கள். அதுபோலவே தாரை முதலிய சிறு தெய்வங்களுக்கு நான்கு கைகளைக் கற்பித்திருக்கிறார்கள். பௌத்தரின் உயர்ந்த தெய்மாகிய புத்தருக்கு இரண்டு கைகள் மட்டும் உள்ளன.

சமணரும் தமது உயர்ந்த தெய்வமாகிய அருகர் அல்லது தீர்த்தங்கரர் உருவங்களுக்கு இரண்டு கைகளை மட்டும் கற்பித்திருக்கிறார்கள். ஆனால், அவர்கள் வணங்கும் இந்திரன், யக்ஷி, ஜுவாலாமாலினி முதலிய சிறு தெய்வங்களுக்கு நான்கு கைகளைக் கற்பித்துச் சிற்ப உருவங்களை அமைத்திருக்கிறார்கள்.

பௌத்த சமணர்களுக்கு மாறாகச் சைவரும் வைணவரும், தமது பரம் பொருளான உயர்ந்த கடவுளுக்கு நான்கு அல்லது எட்டுக் கைகளைக் கற்பித்துத் தமது சிறு தெய்வங்களுக்கு இரண்டு கைகளை மட்டும் கற்பித்துச் சிற்ப உருவங்களை அமைத்திருக்கிறார்கள். இந்த நுட்பம் இந்தச் சமயங்களின் சிற்ப உருவங்களைக் கூர்ந்துபார்த்தால் நன்கு விளங்கும்.

சைவ வைணவ சிற்ப உருவங்களைப் பற்றி இன்னொரு நுட்பத்தையும் வாசகர்கள் உணரவேண்டும். சிவன், திருமால் உருவங்களுக்கு முதன்மை கொடுக்கும் போது அவ்வுருவங்களுக்கு நான்கு அல்லது எட்டுக் கைகளைக் கற்பித்து, அவர்களின் சத்தியாகிய அம்மன், தேவி உருவங்களுக்கு இரண்டு கைகளை மட்டும் கற்பிக்கிறார்கள்; ஆனால், அம்மன், தேவிகளுக்கு முதன்மை கொடுக்கும்போது அவ்வுருவங்களுக்கு நான்கு அல்லது எட்டுக் கைகளைக் கற்பித்துச் சிற்ப உருவம் அமைக்கிறார்கள். சிற்பக் கலையை ஆராயும் வாசகர்கள் இந்த நுட்பத்தையும் உணரவேண்டும்.

நால்வகைப் பிரிவு

உலோகத்தினாலும் கல்லினாலும் அமைக்கப்பட்ட சிற்ப உருவங்களைத் தெய்வ உருவங்கள் என்றும், இயற்கை உருவங்கள் என்றும், கற்பனை உருவங்கள் என்றும், பிரதிமை உருவங்கள் என்றும் நான்கு பெரும் பிரிவுகளாகப் பிரிக்கலாம்.

தெய்வ உருவங்கள் என்பது சிவபெருமான், பார்வதி, கணபதி, முருகன் முதலிய சைவ சமயத் தெய்வ உருவங்களும், திருமால், இலக்குமி, கண்ணன், இராமன் முதலிய வைணவ சமயத் தெய்வ உருவங்களும் ஆகும்.

இயற்கை உருவங்கள் என்பது மனிதன், மிருகம், பறவை முதலிய இயற்கை உருவங்கள் ஆகும்.

கற்பனை உருவங்கள் என்பது இயற்கையில் காணப்படாத, கற்பனையாகக் கற்பித்து அமைக்கப்பட்ட உருவங்கள். இலைக்கொடிகள்,* சரபப் பட்சி, இருதலைப்

*Designs.

பட்சி, மகரம், கின்னரம், குக்குட சர்ப்பம், நாகர், பூதர் முதலியவை கற்பனை உருவங்களாகும். அன்றியும், கற்பனையாக அமைக்கப்பட்ட இலைக்கொடி, பூக்கொடி உருவங்களுமாகும்.

பிரதிமை உருவங்கள் என்பது ஆட்களின் உருவத்தைத் தத்ரூபமாக அமைப்பது.

இந்த நான்கு விதமான சிற்பங்களை நமது நாட்டுக் கோயில்களில் காணலாம். உதாரணத்திற்காக இச் சிற்பங்களில் சிலவற்றை இங்குக் காட்டுவோம். அவற்றையெல்லாம் விரிவாகவும் விளக்கமாகவும் கூறுவதற்கு இது இடம் அன்று; ஆயினும், சுருக்கமாகச் சில கூறுவோம்.

## தெய்வ உருவங்கள்

தெய்வ உருவங்களில் சைவ சமயச் சிற்ப உருவங்களைக் கூறுவோம். சிவபெருமானுக்கு முக்கியமாக இருபத்தைந்து மூர்த்தங்களைக் கூறுவார்கள். அந்த மூர்த்தங்களைக் கல்லிலும் செம்பிலும் அழகாகச் சிற்பிகள் செய்திருக்கிறார்கள். அவையாவன :

1. இலிங்கோத்பவ மூர்த்தம், 2. சுகாசன மூர்த்தம், 3. உமாமகேசம், 4. கலியாணசுந்தரம், 5. மாதொரு பாகர் (அர்த்தநாரி), 6. சோமஸ்கந்தம், 7. சக்கரப் பிரசாதன மூர்த்தம், 8. திரிமூர்த்தி, 6. அரியர மூர்த்தம், 10. தக்ஷிணா மூர்த்தம், 11. பிக்ஷாடனர், 12. கங்காள மூர்த்தி, 13. காலசம்மார மூர்த்தி, 14. காமாந்தகர், 15. சலந்தர சம்மார மூர்த்தி, 16. திரிபுராந்தகர், 17. சரப மூர்த்தி, 18. நீலகண்டர், 19. திரிபாத மூர்த்தி, 20. ஏகபாத மூர்த்தி, 21. பைரவ மூர்த்தி, 22. இடபாரூட மூர்த்தி, 23. சந்திரசேகர மூர்த்தி, 24. நடராஜ மூர்த்தி, 25. கங்காதர மூர்த்தி.

இவற்றில், தக்ஷிணாமூர்த்தி உருவத்தில் வீணாதர தக்ஷிணாமூர்த்தி என்றும், ஞான தக்ஷிணாமூர்த்தி என்றும், யோக தக்ஷிணாமூர்த்தி என்றும் பிரிவுகள் உள்ளன.

நடராஜ மூர்த்தத்தில் சந்தியா தாண்டவ மூர்த்தி, காளிகா தாண்டவ மூர்த்தி, புஜங்கத்திராச மூர்த்தி, புஜங்கலளித மூர்த்தி, ஊர்த்துவ தாண்டவ மூர்த்தி முதலிய பிரிவுகள் உள்ளன.*

பைரவ மூர்த்தத்தில் பிக்ஷாடன பைரவர், லோக பைரவர், காளபைரவர், உக்கிர பைரவர் முதலிய பிரிவு கள் உள்ளன.

கொற்றவை, அம்பிகை, துர்க்கை, காளி, பைரவி முதலிய உருவங்களும் உள்ளன.

கணபதி உருவத்தில் பால கணபதி, நிருத்த கண பதி, மகாகணபதி, வல்லபை கணபதி முதலிய பலவகை யுண்டு.

சுப்பிரமணியர் உருவத்தில், தண்டபாணி, பழனி யாண்டவர், வேல்முருகர், ஆறுமுகர், மயில்வாகனர் முதலிய பல பிரிவுகள் உள்ளன.

பதஞ்சலி, வியாக்கிரபாதர், தும்புரு, நாரதர், நந்தி தேவர், நாயன்மார்கள் முதலியவர்களின் உருவங்களும் உள்ளன.

வைணவ சமயத் திருவுருவங்களில் நாராயணன், கேசவன், மாதவன், கோவிந்தன், அநந்தசயனன், கண் ணன், பலராமன், இராமன், திரிவிக்ரமன், மச்சம், கூர் மம், வராகம், நரசிம்மம் முதலிய பலவிதங்கள் உள்ளன.

---

*சிவபெருமானின் தாண்டவ மூர்த்தங்களைப் பற்றி இந்நூலாசிரியர் எழுதியுள்ள "இறைவன் ஆடிய எழுவகைத் தாண்டவம்" என்னும் நூலில் விரிவாகக் காணலாம்.

இலக்குமி, கஜலக்குமி, பூதேவி, ஸ்ரீதேவி முதலிய உருவங்களும், ஆழ்வார்கள் முதலிய உருவங்களும் உள்ளன.

### பௌத்த, ஜைன சிற்பங்கள்

பௌத்த சமயத்தில் பலவிதமான புத்தர் உருவங்களும், அவலோகிதர் உருவங்களும், தாரை முதலிய உருவங்களும் கணக்கற்றவை உள்ளன.

ஜைன சமயத்தில் இருபத்துநான்கு தீர்த்தங்கரர் உருவங்களும், யக்ஷன், யக்ஷி, சாத்தன் முதலிய பல உருவங்களும் உள்ளன.

இவ்வுருவங்களைப் பற்றிய விளக்கங்களையெல்லாம் விரிவாக இங்கு எழுதப் புகுந்தால் இடம் பெருகும் என்று அஞ்சி நிறுத்துகிறோம். இவ்வுருவங்களைப் பற்றித் தமிழில் நூல்கள் இல்லாதது குறைபாடு ஆகும். ஆதரவு கிடைக்குமானால் இந்நூலாசிரியரே இந்த மூர்த்தங்களைப் பற்றிய நூல் எழுத இருக்கிறார்.

இயற்கை உருவங்களில் ஆண்பெண் உருவங்களின் அழகிய சிற்பங்களைப் பற்றியும், இலைக்கொடி முதலிய கற்பனைச் சிற்பங்களைப் பற்றியும், விலங்கு பறவை முதலிய சிற்ப உருவங்களைப் பற்றியும் விரிவஞ்சிக் கூறாது விடுக்கின்றோம். சமயம் வாய்ப்பின் இவைகளைப் பற்றித் தனி நூல் எழுதுவோம்.

### பிரதிமை சிற்பங்கள்

பிரதிமை உருவங்களைப் பற்றிச் சிறிது கூறி சிற்பக் கலைச் செய்தியை முடிப்போம். பிரதிமை உருவங்கள்* என்பது, தனிப்பட்ட ஆட்களின் உருவ அமைப்பை, உள்ளது உள்ளவாறு அமைப்பது. இந்தக் கலை, மேல் நாட்டு முறைப்படி நமது நாட்டில் வளரவில்லை

*Portrait images

யாயினும், நமது நாட்டு முறைப்படி ஓரளவு வளர்ந்திருந்தது.

பிரதிமை உருவங்களில் பல்லவ அரசர் உருவங்கள் பழைமை வாய்ந்தவை. மாமல்லபுரத்து (மகாபலிபுரம்) வராகப்பெருமாள் குகைக்கோயிலில் இருக்கிற சிம்ம விஷ்ணுவும் அவன் மனைவியரும் ஆகிய பிரதிமை உருவங்களும், அதே இடத்தில் உள்ள மகேந்திரவர்மனும் அவன் மனைவியரும் ஆகிய பிரதிமையுருவங்களும், தருமராச இரதம் என்று பெயர் வழங்கப்படுகிற அத்யந்த காம பல்லவேசுவரக் கோயிலில் உள்ள நரசிம்மவர்மன் பிரதிமையுருவமும், அர்ச்சுனன் இரதம் என்னும் பாறைக்கோயிலில் உள்ள சில பல்லவ அரசர் அரசிகளின் பிரதிமையுருவங்களும் பல்லவ அரசர்களுடையவை.

### சோழர் பிரதிமைகள்

பஞ்ச லோகத்தினாலே பிரதிமையுருவங்களைச் செய்யும் வழக்கம், பிற்காலச் சோழர் காலத்தில் ஏற்பட்டது. தஞ்சாவூர்ப் பெரிய கோயில் சாசனம் ஒன்று, ஷை கோயில் அதிகாரியாயிருந்த ஆதித்தன் சூரியன் என்னும் தென்னவன் மூவேந்த வேளான் என்பவன் அக்கோயிலிலே இராஜராஜ சோழன், அவன் அரசி உலக மாதேவி ஆகிய இருவருடைய செப்புப் பிரதிமையுருவங்களைச் செய்துவைத்த செய்தியைக் கூறுகிறது. அது வருமாறு:

"ஸ்ரீ உடையார் ஸ்ரீ ராஜராஜீஸ்வரம் உடையார்க்கு ஸ்ரீகார்யஞ் செய்கின்ற பொய்கை நாடு கிழவன் ஆதித்தன் சூர்யனான தென்னவன் மூவேந்த வேளான் ராஜராஜீஸ்வரம் உடையார் கோயிலில் யாண்டு இருபத்தொன்பதாவது வரை எழுந்தருளுவித்த செப்பு பிரதிமங்கள்......"

"பாதாதிகேசாந்தம் ஒரு முழமே நால்விரலரை உசரத்து இரண்டு திருக்கையுடையராகக் கனமாக எழுந்தருளுவித்த பெரிய பெருமாள் பிரதிமம் ஒன்று. இவர் எழுந்தருளி நின்ற ஐய்விரலே இரண்டு தோரை உசரத்து பத்மம் ஒன்று. இதனோடுங்கூடச் செய்த ஒன்பதிற்று விரற் சமசதுரத்து ஐய்விரலே ஆறு தோரை உசரத்து பீடம் ஒன்று."

"இருபத்து இருவிரலே இரண்டு தோரை உசரத்து இரண்டு திருக்கையுடையராகக் கனமாக எழுந்தருளுவித்த இவர் நம்பிராட்டியார் ஒலோகமாதேவியார் பிரதிமம் ஒன்று. இவர் எழுந்தருளி நின்ற ஐய்விரல் உசரத்து பத்மம் ஒன்று. இதனோடுகூடச் செய்த ஒன்பதிற்று விரற் சமசதுரத்து ஐய்விரலே இரண்டு தோரை உசரத்து பீடம் ஒன்று."*

இச்சாசனத்தில் கூறப்படுகிற பெரிய பெருமாள் என்பது இராஜராஜ சோழரைக் குறிக்கிறது. ஒலோகமாதேவியார் என்பது இராஜராஜனுடைய அரசியின் பெயர்.

திருக்காளத்திக் கோயிலில் இருந்த மூன்றாங் குலோத்துங்கன் பிரதிமையுருவம் செப்பினால் செய்யப்பட்டது. இது இவ்வரசன் இளைஞனாக இருந்தபோது செய்த பிரதிமையுருவம். இவ்வரசனுடைய மற்றொரு பிரதிமையுருவம் காஞ்சிபுரம் ஏகாம்பரேசுவரர் கோயில் உட்கோபுரத்துக்கு அருகில் இருக்கிறது. இது கற்சிலையால் செய்யப்பட்டது. காஞ்சி காமாட்சியம்மன் கோயிலில் இருந்த இவ்வரசனுடைய சுதையுருவம் இப்போது அழிந்துவிட்டது.

*No 98, pp. 154-155, S. I. I. Vol. II.

### வேறு பிரதிமைகள்

விஜயநகரத்து அரசர் கிருஷ்ணதேவராயரின் செப்புப் பிரதிமையுருவம் திருப்பதிக் கோயிலில் இருக்கிறது. இவருடைய கற்சிலைப் பிரதிமையுருவம் சிதம்பரம் கோயிலில் இருக்கிறது. தஞ்சாவூர், மதுரை இவ்விடங்களில் அரசாண்ட நாயக்க மன்னர்களின் பிரதிமையுருவங்களும், கம்பநாடர், அப்பைய தீக்ஷிதர் முதலியவர்களின் பிரதிமையுருவங்களும் தமிழ் நாட்டு வெவ்வேறு கோயில்களில் காணப்படுகின்றன. தென்னாட்டுப் பிரதிமையுருவங்களைப் பற்றி ஆங்கிலத்தில் நூல்கள் உள்ளன. ஆனால், அவையும் விரிவாகக் கூறவில்லை. தமிழ் நாட்டுப் பிரதிமையுருவங்களைப் பற்றித் தமிழிலே விரிவாக ஒரு நூலேனும் இதுவரையில் எழுதப்படாதது வருந்தத்தக்கது.

### அலங்காரம் ஏன்?

கோயில்களிலே வணங்கப்படும் சிற்ப உருவங்களைப் பற்றி ஒரு செய்தி கூறவேண்டும். கல்சிற்ப உருவங்களும் செம்புச் சிற்ப உருவங்களும் ஆன தெய்வத் திருவுருவங்களுக்கு வேஷ்டி, சேலை முதலிய துணிகளை உடுத்தி வருகிறார்கள். இது அநாவசியமானதும் தவறானதும் ஆகும். வேஷ்டி, சேலை முதலிய ஆடைகளைச் சிற்ப உருவத்தில் அமைத்துச் சிற்பிகள் அவ்வுருவங்களை அமைத்திருக்கிறார்கள். சிற்பிகள் அவ்வுருவங்களை நிர்வாணமாக—அம்மணமாக—அமைக்கவில்லை. அப்படி இருக்க, அச்சிற்ப உருவங்கள்மேல் துணிகளை உடுத்தி விகாரப்படுத்துவது அச்சிற்பங்களின் இயற்கையழகை மறைத்துவிடுவதாகும். நடராசர், சோமஸ்கந்தர், சுப்பிரமணியர், சிவகாம சுந்தரி, பெருமாள், கணபதி, பூதேவி, ஸ்ரீதேவி முதலிய சிற்பங்களை உள்ளது உள்ளவாறே காணும்போது எவ்வளவு அழகாகக் காணப்படு

கின்றன! அவற்றிற்குத் துணிகளை உடுத்திப் பார்க்கும் போது, அவற்றின் அழகு கண்ணுக்குப் புலப்படாமல் போய்விடுகின்றன.

இச்செயல், வேண்டுமென்றே அவற்றின் அழகை மறைத்து, அவற்றை விகாரப்படுத்துவதைப் போலக் காணப்படுகிறது.

# ஓவியக் கலை

நமது நாட்டு ஓவியக் கலையை ஆராய்வோம். ஓவியத்துக்குச் சித்திரம் என்றும் பெயர் உண்டு. நேர்கோடு, வளைந்த கோடு, கோணக்கோடு முதலிய கோடுகளினாலும், சிவப்பு கறுப்பு மஞ்சள் நீலம் முதலிய நிறங்களினாலும் ஓவியங்கள் எழுதப்படுகின்றன.

ஓவியக் கலையின் பழைமை

சங்க காலத்திலே, இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே, ஓவியக் கலை நமது நாட்டில் வளர்ச்சியடைந்திருந்தது என்பதற்குச் சங்க நூல்களிலே சான்றுகள் உள்ளன. நமது நாட்டு ஓவியங்கள் பெரும்பாலும் சுவர் ஓவியங்களே. அதாவது, சுவரிலே எழுதப்பட்ட ஓவியங்கள். சிறுபான்மை மரப்பலகைகளிலும், கிழி (துணிச்சீலை—canvas)களிலும் எழுதப்பட்டன. படம் என்று இப்போது வழங்குகிற தமிழ்ச் சொல் ஆதிகாலத்தில் துணியில் சித்திரம் எழுதப்பட்டதைத் தெரிவிக்கின்றது. படம் அல்லது படாம் என்பது, சித்திரம் எழுதப்பட்ட துணிச்சீலை என்னும் பொருள் உடையது.

காவிரிப்பூம் பட்டினத்தில் இருந்த உவவனம் என்னும் பூஞ்சோலையின் இயற்கைக் காட்சி, ஓவியன் ஒருவன் துணிச்சீலையில் அழகாக எழுதிய சித்திரப் படம் போல இருந்தது என்று மணிமேகலைக் காவியத்தில் சீத்தலைச் சாத்தனார் கூறுகிறார்:

> "வித்தகர் இயற்றிய விளங்கிய கைவினைச்
> சித்திரச் செய்கைப் படாம்போர்த் ததுவே
> யொப்பத் தோன்றிய உவவனம்"

என்பது அப்பகுதி.

சுவர் ஓவியம்

பண்டைக் காலத்தில் அரசருடைய அரண்மனை, பிர புக்களின் மாளிகை, கோயில் மண்டபம் முதலிய கட்ட டங்களின் சுவர்களில் ஓவியங்களை எழுதி அழகுபடுத்தி னார்கள். சுவர் ஓவியங்கள்தாம் பண்டைக் காலத்தில் பெரிதும் பயின்று வந்தன. ஒவ்வொரு அரச னுடைய அரண்மனையிலும் சித்திர மாடம் என்னும் கட்டடம் தனியே அமைந்திருந்தது. பாண்டியன் நன் மாறன் என்பவன், தனது சித்திர மாடத்திலே தங்கி யிருந்தபோது அங்கே உயிர் நீத்தான். அதனால் அவன் **பாண்டியன் சித்திர மாடத்துத் துஞ்சிய நன்மாறன்** என்று புறநானூற்றில் கூறப்படுகிறான்.

பாண்டியனின் சித்திர மாடத்தை மாங்குடி மருத னார் என்னும் புலவர்,

> " கயங்கண்ட வயங்குடை நகரத்துச்
> செம்பியன் றன்ன செஞ்சுவர் புனைந்து "

என்று கூறுகிறார்.[1]

"குளிர்ச்சியாற் கயத்தைக் கண்டார்போன்ற விளங் குதலையுடைய கோயிலிடத்து (அரண்மனையில்) செம் பாற் செய்தால் ஒத்த செவ்விய சுவர்களைச் சித்திரம் எழுதி" என்று இதற்கு நச்சினார்க்கினியர் உரை எழுது கிறார்.

நக்கீரர் பாடிய நெடுநல்வாடையிலும் பாண்டிய னுடைய சித்திர மாடம் கூறப்படுகிறது.

> " வெள்ளி யன்ன விளங்குஞ் சுதையுரீஇ
> மணிகண் டன்ன மாத்திரட் டிண்காழ்ச்
> செம்பியன் றன்ன செய்வுறு நெடுஞ்சுவர்

[1] மதுரைக் காஞ்சி, 484—85.

உருவப் பல்பூ வொருகொடி வளைஇக்
கருவொடு பெயரிய காண்பின் நல்லில் ''

என்று அவர் சித்திர மாடத்தை வருணிக்கிறார்.

"வெள்ளியை யொத்து விளங்குகின்ற சாந்தை வாரி, நீலமணியைக் கண்டாற்போன்ற கருமையினையும் திரட்சியினையும் உடைய திண்ணிய தூண்களையுடையவாய், செம்பினாலே பண்ணினாலொத்த தொழில்கள் செய்தலுற்ற நெடிய சுவரிலே வடிவழகினை யுடைத்தாகிய பல பூக்களையுடைய வல்லி சாதியாகிய ஒப்பில்லாத கொடியை யெழுதிப் புதைத்த கருவோடே பெயர்பெற்ற காட்சிக்கினிய நன்றாகிய இல்" என்று இதற்கு நச்சினார்க்கினியர் உரை எழுதுகிறார்.

பரங்குன்றத்துச் சுவர் ஓவியம்

மதுரைக்கு அருகில் உள்ள திருப்பரங்குன்றத்து மலையிலே முருகப்பெருமான் கோயிலைச் சார்ந்து ஒரு சித்திர மாடம் இருந்தது என்று குன்றம்பூதனார் என்னும் புலவர் கூறுகிறார் :

" நின் குன்றத்து
எழுதெழில் அம்பலங் காமவேள் அம்பின்
தொழில் வீற்றிருந்த நகர்."[1]

"நின் குன்றத்தின்கண் எழுதிய அழகையுடைய அம்பலம், அம்பினது ஏத்தொழில் நிலைபெற்ற காமவேள் சிரமச்சாலையை (ஆயுதப் பயிற்சி செய்யுமிடம்) யொக்கும்" என்பது பரிமேலழகர் உரை.

இந்தச் சித்திர மாடத்தில் எழுதப்பட்டிருந்த சில ஓவியங்களை, நப்பண்ணனார் என்னும் புலவர் சற்று விளக்கிக் கூறுகிறார். முருகப் பெருமானை வணங்கிய

[1]பரிபாடல் 18 ; 27—29.

பிறகு, மக்கள் இந்தச் சித்திர மண்டபத்தில் சென்று அங்குள்ள ஓவியக் காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தார்கள் என்றும், எழுதப்பட்டிருந்த சித்திரங்களில் காமன், இரதி, அகலிகை, அவளிடம் சென்ற இந்திரன், கௌதம முனிவன், அவனைக் கண்ட இந்திரன் பூனையுருவங் கொண்டோடியது முதலிய ஓவியங்கள் எழுதப்பட்டிருந்தன என்றும், இச்சித்திரங்களைக் கண்டவர் 'இது என்ன, இது என்ன' என்று அறிந்தவர்களைக் கேட்க, அவர்கள் இது இது இன்னின்ன சித்திரம் என்று விளக்கிக் கூறினார்கள் என்றும் நப்பண்ணனார் கூறுகிறார்:

" இரதி காமன் இவள் இவன் எனாஅ
விரகியர் வினவ வினாவிறுப் போரும்
இந்திரன் பூசை இவளகலிகை இவன்
சென்ற கவுதமன் சினனுறக் கல்லுரு
ஒன்றிய படியிதென் றுரைசெய் வோரும்
இன்ன பலபல வெழுத்துநிலை மண்டபம்."[1]

திருச்சி மாவட்டம், திருச்சி தாலுக்காவில் உள்ள திருவெறும்பூர் கோயிலைச் சார்ந்து சித்திரக்கூடம் என்னும் மண்டபம் பண்டைக் காலத்தில் இருந்த செய்தியைச் சாசனங்கள் தெரிவிக்கின்றன.[2]

### பல்லவர், சோழர் ஓவியங்கள்

காஞ்சிபுரத்துக் கயிலாசநாதர் கோயிலிலும், விழுப்புரம் தாலுக்காவில் பனமலைக் கோயிலிலும், தஞ்சாவூர்ப் பெருவுடையார் கோயிலிலும் பல்லவர் காலத்துச் சித்திரமும், சோழர் காலத்துச் சித்திரமும் சுவர்களில் காணப்படுகின்றன. புதுக்கோட்டையைச் சார்ந்த சித்தன்ன வாசல் குகைக்கோயிலிலும், திருநெல்வேலித்

---

[1] பரிபாடல் 19 : 48—53. [2] S. I. I. VOL. XIII, No. 162, 138, 139.

திருமலைபுரத்துக் குகைக்கோயிலிலும் பல்லவர் காலத்து ஓவியமும், பாண்டியர் காலத்து ஓவியமும் காணப்படுகின்றன. குகைக்கோயில் சித்திரங்களும் சுவர் ஓவியங்களே. குகையின் பாறைச்சுவரின்மேல் மெல்லியதாகச் சுதை பூசி, அதன்மீது ஓவியங்கள் எழுதப்பட்டன. பண்டைக் காலத்தில் முக்கியமான கோயில்களில் ஓவியங்கள் எழுதப்பட்டிருந்தன. பிற்காலத்தில் அவை அழிந்தும் அழிக்கப்பட்டும் மறைந்துவிட்டன.

ஓவியம் அழிக்கப்படுதல்

காஞ்சிபுரத்து நூற்றுக்கால் மண்டபத்தின் மேற்புறத்தளத்தில் ஓவியங்கள் எழுதப்பட்டிருந்ததைச் சில ஆண்டுகளுக்கு முன்னர் கண்டு வியப்படைந்தேன். இரண்டாண்டு கழிந்து அந்த ஓவியங்களைப் படம்பிடிப்பதற்காகச் சென்றபோது, அந்தோ! அந்தச் சிற்பங்கள் முழுவதும் மறைக்கப்பட்டிருந்தைக் கண்டேன். கோபி நிற நீறு நன்றாகப் பூசப்பட்டுச் சித்திரங்கள் யாவும் மறைக்கப்பட்டுக் கிடந்தன. இவ்வாறு கலையறிவு இல்லாத "தர்மகர்த்தர்கள்" எத்தனை கோயில்களில் எத்தனை சித்திரங்களை அழித்தார்களோ! பண்டைக் காலத்தில் கலைப்பெருமை அறிந்த கலையன்பர்கள் பொருள் செலவு செய்து சித்திரங்களை எழுதி அழகுபடுத்திவைத்தார்கள்; இக்காலத்து "தர்மகர்த்தர்கள்" அந்தச் சித்திரங்களைச் சுண்ணம் பூசி மறைத்துக் கோயிலை "அழகு" செய்கிறார்கள்!

'சுவரை வைத்தல்லவோ சித்திரம் எழுதவேண்டும்'

பண்டைக் காலத்தில் சுவர் ஓவியங்களே பெரிதும் எழுதப்பட்டன என்றும், அவை பெரும்பாலும் அரசரின் அரண்மனைச் சுவர்களிலும், பிரபுக்களின் மாளிகைச் சுவர்களிலும், கோயில் சுவர்களிலும் எழுதப்பட்டிருந்

தன என்றும் கூறினோம். பட்டினத்துப்பிள்ளையார், தாம் உலகக் காட்சியை மறந்து கடவுட் காட்சியை அடைந்ததை, சுவரில் எழுதப்பட்ட ஓவியத்துக்கு உவமை கூறுகிறார். சுவரில் எழுதப்பட்ட சித்திரங்களைக் காண்பவன், அந்த ஓவியங்கள் காட்டும் காட்சிகளைக் கண்டு மனம் மகிழ்ந்து, அவற்றில் ஈடுபடுகிறான். அவன் சற்று அருகில் வந்து அந்த ஓவியங்களைக் கையினால் தடவிப் பார்க்கும்போது, அவை மறைந்து சுவராகத் தோன்றுவதைக் காண்கிறான். இந்த உவமையை அவர் தமது அநுபவத்துக்கு ஒத்திட்டுக் கூறுகிறார்:

"யாவையும் எனக்குப் பொய்யெனத் தோன்றி
மேவரு நீயே மெய்யெனத் தோன்றினை
ஓவியப் புலவன் சாயல்பெற எழுதிச்
சிற்ப விகற்பம் எல்லாம் ஒன்றித்
தவிராது தடவினர் தமக்குச்
சுவராய்த் தோன்றும் துணிவுபோன் றனவே."[1]

சுவர்ச் சித்திரங்கள் பெரிதும் பயிலப்பட்டிருந்த படியினால்தான், "சுவரை வைத்தல்லவோ சித்திரம் எழுத வேண்டும்" என்னும் பழமொழி வழங்குவதாயிற்று. "அச்சிலேற் பண்டியுமில்லை, சுவரிலேற் சித்திரமு மில்லதே போன்று" என்று அருங்கலச் செப்பு என்னும் நூல் கூறுகிறது.

### கண்ணுள் வினைஞர்

சித்திரக்காரர் கண்ணுள் வினைஞர் என்று கூறப்படுகின்றனர். என்னை?

"எண்வகைச் செய்தியும் உவமம் காட்டி
நுண்ணிதி னுணர்ந்த நுழைந்த நோக்கிற்
கண்ணுள் வினைஞர்."[2]

[1] திருக்கழுமல மும்மணிக்கோவை, 10. [2] மதுரைக் காஞ்சி, 516—518.

"பலவகைப்பட்ட கூரிதாக வுணர்ந்த தொழில்களை யும் ஒப்புக்காட்டி, கூரிய அறிவினையுடைய சித்திரகாரி களும்."

"சித்திரமெழுதுவார்க்கு வடிவின் தொழில்கள் தோன்ற எழுதுவதற்கு அரிது என்பது பற்றிச் செய்தி யும் என்றார். நோக்கினார் கண்ணிடத்தே தம் தொழிலை நிறுத்துதலின் கண்ணுள் வினைஞர் என்றார்" என்பது நச்சினார்க்கினியர் உரை.

சித்திரகாரப் புலி

ஏறத்தாழக் கி.பி. 600 முதல் 630 வரையில் அர சாண்டவனும், திருநாவுக்கரசர் காலத்திலிருந்தவனு மான மகேந்திர வர்மன் என்னும் பல்லவ அரசன், தனது சிறப்புப் பெயர்களில் ஒன்றாகச் சித்திரகாரப் புலி என்னும் பெயரைக் கொண்டிருந்தான். இதனால், இவன் சித்திரக் கலையில் வல்லவன் என்று தெரிகிறான். இவன் ஓவிய நூல் ஒன்றுக்கு ஓர் உரை எழுதினான் என்பதை, இவ்வரசன், காஞ்சிபுரத்துக்கு அடுத்த மாமண்டூரில் அமைத்த குகைக்கோயில் சாசனம் கூறுகிறது.

ஓவிய நூல்

மாதவி என்னும் நாடக மகள், பல கலைகளைக் கற்ற வள் என்றும், அவற்றில் ஓவியக் கலையையும் பயின்றாள் என்றும் மணிமேகலை கூறுகிறது:

"ஓவியச் செந்நூல் உரை நூற் கிடக்கையும்
கற்றுத்துறை போகிய பொற்றொடி மங்கை"[1]

அடியார்க்கு நல்லார் காலத்திலும் ஓவிய நூல் இருந்தது. அடியார்க்கு நல்லார் ஓவிய நூலைக்

[1] ஊர் அலர்., 31—32.

குறிப்பிடுகிறதோடு, அந்நூலிலிருந்து ஒரு சூத்திரத்தையும் மேற்கோள் காட்டுகிறார்:

"ஓவிய நூலுள், நிற்றல், இருத்தல், கிடத்தல், இயங்குதல் என்றும் இவற்றின் விகற்பங்கள் பலவுள; அவற்றுள் இருத்தல்—திரிதரவுடையனவும் திரிதரவில்லனவுமென இரு பகுதிய: அவற்றுள் திரிதரவுடையன—யானை, தேர், புரவி, பூனை(?) முதலியன; திரிதரவில்லன ஒன்பது வகைப்படும். அவை பதுமுகம், உற்கட்டிதம், ஒப்படியிருக்கை, சம்புடம், அயமுகம், சுவத்திகம், தனிப்புடம், மண்டிலம், ஏகபாதம் என விவை. என்னை?

'பதுமுக முற்கட் டிதமே யொப்படி
யிருக்கை சம்புட மயமுகஞ் சுவத்திகந்
தனிப்புட மண்டில மேக பாத
முளப்பட் வொன்பது மாகுந்
திரிதர வில்லா விருக்கை யென்ப'

என்றாராகலான்."[1]

ஓவியம் பற்றிய பெயர்கள்

ஓவியத்தை வட்டிகைச் செய்தி என்பர். என்னை? "வட்டிகைச் செய்தியின் வரைந்த பாவையின்" என்பது மணிமேகலை.

வண்ணம் தீட்டாமல் வரைந்த ஓவியத்துக்குப் புனையா ஓவியம் என்று பெயர் கூறப்படுகிறது. இதனை ஆங்கிலத்தில் Outline drawing என்பர்.

"மனையகம் புகுந்து மணிமே கலைதான்
புனையா ஓவியம் போல நிற்றலும்"[2]

என்றும்,

[1] சிலம்பு. வேனிற் காதை, 23—26ஆம் அடிகளின் உரை மேற்கோள்.
[2] மணிமேகலை, ஆதிரை., 130—131.

"புனையா ஓவியம் புறம்போந் தென்ன"[1]

என்றும் மணிமேகலை கூறுகிறது.

"புனையா ஓவியம் கடுப்ப" என்று நெடுநல்வாடை (147) கூறுகிறது. இதற்கு, "புனையா ஓவியம் கடுப்ப—வண்ணங்களைக் கொண்டெழுதாத வடிவைக் கோட்டின சித்திரத்தை யொப்ப" என்று நச்சினார்க்கினியர் உரை எழுதுகிறார்.

ஓவியத் தொழிலுக்கு வட்டிகைச் செய்தி என்னும் பெயரும் உண்டு. வட்டிகை என்பது துகிலிகை.[2]

காவிரிப்பூம்பட்டினத்திலே, தன் காதலியுடன் அமர்ந்து யாழ் வாசித்துக்கொண்டிருந்த எட்டி குமரன் என்பவன், திடீரென்று ஏதோ சிந்தனையில் ஆழ்ந்து ஓவியம் போன்று அசைவற்றிருந்ததைக் கூறுகிற சீத்தலைச்சாத்தனார், வட்டிகைச் செய்தி (ஓவியப் படம்) போல் இருந்தான் என்று கூறுகிறார்:

"தகரக் குழலாள் மன்னொடு மயங்கி
மகர யாழின் வான்கோடு தழீஇ
வட்டிகைச் செய்தியின் வரைந்த பாவையின்
எட்டி குமரன் இருந்தான்..." [3]

வட்டிகைப் பலகை என்பது, ஓவியம் எழுதும்போது வர்ணங்களைக் குழைக்கும் பலகை.

பாலை பாடிய பெருங்கடுங்கோ என்பவர் அரசர் குலத்தில் பிறந்த புலவர். இவர், ஓவியர் சித்திரம் எழுதும் துகிலிகை, பாதிரிப்பூவைப் போல இருக்கும் என்று கூறுகிறார்.

---

[1] மணி., சிறைக்கோட்டம்., 88. [2] துகிலிகை—Brush.
[3] மணிமேகலை, பளிக்கறை., 55—58.

" ஓவ மாக்கள் ஒள்ளரக் கூட்டிய
துகிலிகை யன்ன துய்த்தலைப் பாதிரி "

என்பது அவர் வாக்கு[1]

சில ஓவியச் செய்திகள்

கந்தரத்தனார் என்னும் புலவர், அழகிய பெண் மகள் ஒருத்தியை ஓவியக் கலைஞன் எழுதிய பெண் உருவத்திற்கு உவமை கூறுகிறார்.

" வல்லோன்
எழுதி யன்ன காண்டகு வனப்பின்
ஐயள் மாயோள்........."

என்று அவர் கூறுகிறார்.[2]

ஓவியத்தைப் பற்றிச் சீவகசிந்தாமணி காவியத்தில் திருத்தக்கதேவர் குறிப்பிடுகிறார். தோலாமொழித் தேவரும் தமது சூளாமணிக் காவியத்தில் கூறுகிறார். கொங்குவேளிரும் பெருங்கதை என்னும் காவியத்திலே கூறுகிறார்.

கம்பர், தமது இராமயணத்தில் தமிழ் நாட்டுப் பண்புகளை அமைத்துக் கூறுவதுபோலவே, இவர்களும் தமது காவியங்களில் தமிழ் நாட்டுக் கலைகள் பலவற்றை இடையிடையே அமைத்துக் கூறுகின்றனர். ஓவியக் கலையைப் பற்றி இவர்கள் கூறுவதைக் காண்போம்.

கொங்குவேளிர் தமது பெருங்கதை என்னும் நூலிலே கூறும் ஓவியத்தைப் பற்றிய செய்திகள் இவை:

" எண்மெய்ப் பாட்டினுள் இரக்கம் மெய்ந்நிறீஇ
ஒண்வினை ஓவியர் கண்ணிய விருத்தியுள்
தலையது............"[3]

---

[1] நற்றிணை, 118. [2] நற்றிணை, 146. [3] உஞ்சைக் காண்டம் : நருமதை சம்பந்தம்., 45—47.

" ஒன்பது விருத்தி நற்பதம் நுனித்த
ஓவவினை யாளர் பாவனை நிறீஇ
வட்டிகை வாக்கின் வண்ணக் கைவினைக்
கட்டளைப் பாவை............"[1]

ஓவியக் கலைஞர் நகை உவகை அவலம் வீரம் முதலிய எட்டு வகை மெய்ப்பாடுகளையும், இருத்தல் கிடத்தல் நிற்றல் முதலிய ஒன்பது வகையான விருத்திகளையும் தமது சித்திரங்களில் அமைத்து எழுதியதை இப்பகுதிகள் விளக்குகின்றன.

உதயண மன்னன் பள்ளியறையுள் இருந்தபோது, அவ்வறையின் சுவர்களில் ஓவியக் கலைஞர் எழுதியிருந்த பூங்கொடி, மான், மறி முதலிய ஓவியங்களைக் கண்டு வியந்தான் என்று கூறுகிறார்:

" வித்தகர் எழுதிய சித்திரக் கொடியின்
மொய்த்தலர் தாரோன் வைத்துநனி நோக்கிக்
கொடியின் வகையுங் கொடுந்தாள் மறியும்
வடிவமை பார்வை வகுத்த வண்ணமும்
திருத்தகை யண்ணல் விரித்துநன் குணர்தலின்
மெய்பெறு விசேடம் வியந்தனன் இருப்ப."[2]

சிந்தாமணி காவியத்தை இயற்றிய திருத்தக்க தேவர், சோழ அரசர் பரம்பரையில் வந்தவர். அரச பரம்பரையில் வந்தவராதலின், அரண்மனைச் சுவர்களில் எழுதப்பட்டிருந்த சித்திரங்களைப் பற்றியும், சித்திரக் கலையைப் பற்றியும் நன்கறிந்திருந்தார். ஆகவே, இவர் தமது காவியத்தில் ஓவியங்களைப் பற்றிச் சில இடங்களில் கூறுகிறார்.

மங்கையரின் அழகான உருவ அமைப்பைக் கூறும் போது, ஓவியக் கலைஞர் எழுதிய சித்திரம் போன்று அழகுடைய மங்கையர் என்று கூறுகிறார் :

---

[1] இலாவாண காண்டம், நகர்வலங் கொண்டது, 40—44.

[2] மகத காண்டம், நலனுராய்ச்சி, 97—102.

"உரைகிழித் துணரும் ஒப்பின்
ஓவியப் பாவை ஒத்தார்"[1]

என்றும்,

"ஓவியர் தம் பாவையினொ
டொப்பரிய நங்கை"[2]

என்றும்,

"உயிர்பெற எழுதப் பட்ட
ஓவியப் பாவை யொப்பாள்"[3]

என்றும் கூறுகிறார்.

அநங்கமாவீணை என்னும் இயக்கி, சீவகனை மயக்கு வதற்காக அவனை நோக்கினாள். அப்போது அவளுடைய அழகு, படத்தில் எழுதப்பட்ட பெண் உருவம் போன்று அழகாகக் காணப்பட்டதாம்.

" வடுப்பிள வனைய கண்ணாள்
வல்லவன் எழுதப் பட்ட
படத்திடைப் பாவை போன்றோர்
நோக்கின ளாகி நிற்ப "[4]

என்று கூறுகிறார்.

விசையை என்னும் அரசி, தனக்குச் சுடுகாட்டிலே உதவி செய்த ஒரு பெண்தெய்வத்தின் உருவத்தையும், தான் ஏறிச் சென்ற மயிற்பொறி விமானத்தின் உரு வத்தையும் அரண்மனைச் சுவரிலே ஓவியமாக எழுது வித்த செய்தியைத் திருத்தக்கதேவர் கூறுகிறார்;

---

[1] காந்தருவ தத்தையார்., 210. [2] சுரமஞ்சரியார்., 23
[3] சுரமஞ்சரியார்., 55. [4] கனகமாலையார்., 17.

" தனியே துயருழந்து தாழ்ந்து
வீழ்ந்த சுடுகாட்டுள்
இனியாள் இடர்நீக்கி ஏமஞ்
சேர்த்தி உயக்கொண்ட
கனியார் மொழியாட்கும் மயிற்கும்
காமர் பதிநல்கி
முனியாது தான்காண மொய்கொள்
மாடத் தெழுதுவித்தாள்."[1]

மகளிர் சிலர் தமது வீடுகளிலே வர்ணங்களினாலே சித்திரங்களை எழுதிக்கொண்டிருந்தபோது, தெருவிலே நிகழ்ந்த ஒரு காட்சியின் சந்தடியைக் கேட்டுத் தாம் எழுதிய ஓவியங்களை அப்படியே விட்டுவிட்டுத் தெரு வாயலில் வந்து நின்றதை ஒரு கவியில் கூறுகிறார் :

"வட்டிகை மணிப்பலகை வண்ணநுண் துகிலிகை
இட்டிடை நுடங்கநொந் திரியலுற்ற மஞ்ஞையில்
கட்டழ லுயிர்ப்பின்வெந்து கண்ணிதீந்து பொன்னுக
மட்டவிழ்ந்த கோதைமார்கள் வந்துவாயில் பற்றினார்."[2]

தக்க நாட்டிலே சீவகன் யாத்திரை செய்தபோது, அந்நாட்டில் காட்சியளித்த தாமரைக் குளங்கள், திரைச் சீலையில் ஓவியக் கலைஞன் எழுதிய தாமரைக் குளம் போலத் தோன்றின என்று கூறுகிறார் :

" படம்புனைந் தெழுதிய வடிவில் பங்கயத்
தடம்பல தழீஇயது தக்க நாடு."[3]

குணமாலை என்னும் கன்னிகை தன் தோழியுடன் பல்லக்கு ஏறி வீதி வழியே சென்றுகொண்டிருந்தாள். அப்போது, அசனிவேகம் என்னும் பெயருள்ள யானை

---

[1] முத்தி இலம்பகம், 5. [2] குணமாலையார், 259. [3] கேமசரியார், 28.

மதங் கொண்டு, பாகர்க்கு அடங்காமல் வீதி வழியே ஓடிவந்தது. குணமாலையின் பல்லக்கைத் தூக்கிச் சென்றவர், மதயானைக்கு அஞ்சிச் சிவிகையைக் கீழே வைத்துவிட்டு உயிர்தப்பி ஓடிவிட்டார்கள். யானை குணமாலைக்கு அருகில் வந்துவிட்டது. தப்பி ஓட முடியாமல் அவள் அஞ்சி நடுங்கினாள். அப்போது தோழர்களோடு அவ்வழியே வந்த சீவகன், கன்னியின் ஆபத்தைக் கண்டு, யானைப்போரில் பழகியவன் ஆதலின், திடுமென ஓடிச் சிங்கம்போல் கர்ச்சித்து யானையின் முன்பு பாய்ந்து, அதன் இரண்டு கொம்புகளையும் பிடித்து அதன் மதத்தை அடக்கினான். குணமாலை அச்சத்தால் மெய்நடுங்கி நின்றாள்.

அப்போது அவன் தற்செயலாக அவள் முகத்தை நோக்கினான். அவளுடைய அழகான முகத்தில் அச்சம் என்னும் மெய்ப்பாடு அமைந்திருப்பதைக் கண்டான். இவ்வாறு யானையை அடக்கிக் கன்னியின் துயரத்தை நீக்கிய பிறகு, சீவகன் தன் இல்லஞ் சென்றான். சென்று, ஓவியக் கலையில் வல்லவனான அவன், யானையின் முன்னிலையில் குணமாலை அஞ்சி நடுங்கிய அச்சம் என்னும் மெய்ப்பாடு தோன்றும்படி ஒரு சித்திரத்தை எழுதினான் என்று திருத்தக்கதேவர் கூறுகிறார். அச் செய்யுள் இது:

"கூட்டினான் மணிபல தெளித்துக் கொண்டவன்
தீட்டினான் கிழிமிசைத் திலக வாள்நுதல்
வேட்டமால் களிற்றின்முன் வெருவி நின்றதோர்
நாட்டமும் நடுக்கமும் நங்கை வண்ணமே."[1]

## தென்னிந்திய ஓவியம்

தென் இந்திய சித்திரங்கள் பண்டைக் காலத்தில் சிறப்புற்றிருந்தன. ஹைதராபாத்து இராச்சி

[1] குணமாலையார்., 155.

